உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று மாதந்தோறும்வெளிவரும்

## ஒரு தமிழ்ப்பத்திரிகை.

"எனைத்தானு நல்லவை கேட்க வனைத்தானு
மான்ற பெருமை தரும்"—திருவள்ளுவர்.

தொகுதி ௧௯.] ரௌத்திரி-ஞூ தை-மீ [பகுதி ௩.

VOl. XIX. January—February—1921. No. 3.

உள்ளுறை.



பத்திராதிபர்—திரு. நாராயணையங்கார்.

மதுரைத்தமிழ்ச்சங்கமுத்திராசாலைப்
பதிப்பு.

வருஷம் ஒன்றுக்கு ரூ. 4.] [தனிப்பிரதி அணா-8.

வெளிநாடுகளுக்கு ரூ. 4—8—0.

உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி ககூ.] ரௌத்திரி-ஹு தை-மீ [பகுதி ந.

Vol. XIX. January—February—1921. No. 3.

ஶ்ரீ:

## தொல்காப்பிய உரையாசிரியருரை.

தொல்காப்பிய உரைகளுள்ளே உரையாசிரியருரையென்று வழக்குப் பெறுவது இளம்பூரணவடிகளா லியற்றப்பெற்றதாகும். உரையாசிரியரும் இளம்பூரணரும் ஒருவரேயாவரென்பது சிலப்பதிகார அடியார்க்குநல்லாருரையில் "உரையாசிரியராகிய இளம்பூரணவடிகள்" என வருவதனாற் றெளியப்பட்டது.

உரையாசிரியராகிய இளம்பூரணரே தொல்காப்பியத்துக்கு ஆசிரியர் கருத்துக்கிணங்க முதன்முதல் உண்மைப்பொருள் கண்டோராவர். கற்றோர்பலராலும் மிகுதியும் போற்றற்குரியதாய் இக்காலத்துவழங்கும் சேனாவரையருரைக்கு இவ்வுரையாசிரியருரையே வழிகாட்டியாக அமைந்தது. சேனாவரையர் தம் உரையிற் பலவிடங்களில் உரையாசிரியரைக் குறித்துள்ளார். சிற்சிலவிடங்களில் சேனாவரையர், நச்சினார்க்கினியர், நன்னூலுரைகாரர் முதலியோர் தம் கொள்கைகளை வலியுறுத்த உரையாசிரியருரைப்பகுதிகளைச் சான்றுகாட்டுவது முண்டு. இவ்வுரையே தொல்காப்பிய நூலுக்குத் தொன்றுதொட்டுவழங்கிவந்த உரைகளில் ஆசிரியர் கருத்தொடுபட்ட உண்மையுரையென்று சான்றோர்பலராலும் போற்றப் பட்டுவந்தது. இவ்விஷயம் அவ்வுரையின் பழையஏட்டுச்சுவடிகளின் இறுதியில் "உண்மைப்பொருளும் உதாரணமும் முடிந்தது" என்று எழுதியிருத்தல்கொண்டு அறியலாவது. சேனாவரையர்கருத்து மிஃதே

யாமென்பது அவர் தம் உரையின்கண் உரையாசிரியருரைப்பிரதியில் ஒரோவழிக்காணப்படும் குற்றங்களின்பொருந்தாமைகாட்டி "ஆசிரியர் (தொல்காப்பியனர்)க் கது கருத்தன்மையின் உரையாசிரியர்க்கும் அது கருத்தன்றென்க" எனக் கூறுவதா லறியக்கிடக்கிறது. இன்னும் இவ்வுரையின் அருமைபெருமைகளை நன்குபரிசிலனைபண்ணி வெளிப்படுத்த முன்னோர்மொழிகள் பொன்னேபோற் போற்றற் குரியனவாயுளவாகலின் அவற்றையும் கீழே தருகின்றேன்.

"இப்பெரியோர் (இளம்பூரணர்) பழையதமிழிலக்கண நூலாகிய தொல்காப்பியத்துக்கு முதன் முதல் உரையிட்ட ஆதியுரைகாரர். ஆதியுரையாளர் என்பதுபற்றியே உரையாசிரியரென்னும் பொதுப்பெயரே இவர்க்குரிய சிறப்புப்பெயராக வழங்குவதாயிற்று. பிறர் நுழைந்து காண முடியாவண்ணம் இருண்டுகிடந்த தொல்காப்பியமென்னும் சரக்கறையுள் தம்மறிவென்னும் அவியாவிளக்கைக்கொண்டுதுருவி அங்கே குவிக்கப்பட்டிருந்த அரதனக்குவியல்களை உலகிற்கு முதலிற்காட்டிய பெருந்தகையார் இவரே. இவர்க்குப்பின்வந்த உரைகாரரது செய்கையெல்லாம் தொல்காப்பியச்சரக்கறையுள் இவ்வடிகள் ஏற்றிவைத்திருந்த அவியாவிளக்கினுதவியால் அங்கிருந்த அரதனக்குவியல்களைக்கண்டு வியந்ததும் அவ்வரும்பெறற்பொருள்களை மாசுநீக்கித் தூசிபடியாவண்ணம் சுத்தஞ்செய்து வைத்ததுமேயாகும்" (செந்தமிழ், தொகுதி 4 பக்கம் 116).

இங்ஙனம் உரைகாரர்களுள் மிகுந்தசிறப்புப்பெறுதற் குரியவராய், நன்குமதிப்புடனெண்ணப்படும் இளம்பூரணவடிகளுரை இப்பொழுது தொல்காப்பிய முழுமைக்குமுள்ளது. அதன் எழுத்ததிகாரப்பகுதியே அச்சுப்புத்தகமாக அமைந்துள்ளது. பொருளதிகாரத்திற் சிலபகுதிகள் இப்போது அச்சிடப்பட்டுவருதல் காணப்படுகிறது. அங்ஙனமே சொல்லதிகாரவுரையும் அச்சியிற்றி வெளியிடப்பெறுவதாயின் அப்பேற்றிற்குத் தமிழகமுழுவதும் நன்றியறிதற்கடப்பாடுடையதாகும்.

இது நிற்க; அவ்வுரைமுழுதும் இப்பொழுது நமக்குக் கிடைத்த நிலையில் உரையாசிரியருரைத்த உண்மைப்பொருள்கள் சிற்சில மாறுதல்களுக்கு உட்பட்டிருத்தல் தேறப்படும். அம்மாறுதல்களிற் சில இங்கே குறிக்கப்படுகின்றன.

"தென்னவற் பெயரிய துன்னருந் துப்பிற்
றொன்முது கடவுட் பின்னர்மேய
வரைத்தா ழருவிப் பொருப்பிற் பொருந."

என்னும் மதுரைக்காஞ்சியடிகளி னுரையில் நச்சினார்க்கினியர் "இராவணன் (தென்றிசை) ஆளுதல் பாயிரச்சூத்திரத்து உரையாசிரியர் கூறிய உரையானுமுணர்க" எனக் கூறினமை யாவரும் நன்கறிந்தது. இவ்விஷயம் அச்சிட்ட எழுத்ததிகார இளம்பூரணருரையி லில்லை.

அடியார்க்குநல்லார், சிலப்பதிகாரத்தில் "நெடியோன் குன்றமும் தொடியோள் பௌவமும்" என்பதன் உரையிலே, குமரியாறு கடல் கொண்ட செய்தி, "எற்றாற் பெறுதுமெனின், நக்கீரருரைத்த இறையனார் பொருளுரையானும் உரையாசிரியராகிய இளம்பூரணவடிகள் முகவுரையானும் பெறுதும் எனக் கூறியுள்ளார். இப்பகுதியும் இளம்பூரணருரையில் யாண்டுங் காணப்படவில்லை.

தொல்காப்பியப் பாயிரத்தின்கண்ணே ஆசிரியர் நச்சினார்க்கினியர் பதவுரைகூறி முடித்து "இப்பாயிரமுஞ் செய்யுளாகலின் இங்ஙனம் மாட்டுறுப்புநிகழக் கூறினர். இதற் கிங்ஙனங் கண்ணழித்தல் உரையாசிரியர்க்குங் கருத்தென்பது அவருரையா னுணர்க" என்றுகூறி, மேலும், "இனி இவ்வாறன்றிப் பிறவாறு கண்ணழிவுகூறுவாரு முளராலெனின்", எனத் தோற்றுவாய்செய்து காரணங்காட்டி, முடிவில், "அது பொருளன்மையுணர்க" என்றுரைத்தார். பாயிரச்சூத்திரத்தின் இளம்பூரணருரையில் நச்சினார்க்கினியர் கூறியவாறு கண்ணழிவு கூறப்படவில்லை. ஆனால் அவர் எடுத்துக்களைந்த இரண்டாவது கொள்கையே ஆண்டுக் காணப்பெறுவது.

நூன்மரபு "மெய்யோ டியையினும் என்னும் சூத்திரவுரையில் 'விளங்காய்திரட்டினாரில்லைக் களங்கனியைக் காரெனச்செய்தாருமில்' என்பதே காட்டினர் உரையாசிரியரும்" என்று நச்சினார்க்கினியர் சுட்டின இப்பகுதியும் இளம்பூரணத்திலில்லை.

ஆகவே, இங்ஙனமாகிய மாறுதல்களைக்கொண்டு இப்பொழுது நமக்குக் கிடைத்துள்ள எழுத்ததிகார இளம்பூரணருரை உரையாசிரியருரையன்றென வொருதலையாகத் துணிதல்கூடுமோ வென்றாராயப்புக்கவிடத்து அது சிறிதும் இயலாததென்றே முடிகிறது.

நூன்மரபு "ஔகமவ" என்ற முதற்குறிப்புடைய சூத்திரத்தில், நச்சினார்க்கினியர், உரையாசிரியருரையுள் உரிஞ்யாது பொருந்யாது, திரும்யாது, தெவ்யாது, என இருமொழிக்கண்வருவன உதகரிக்கப் பட்டமையைக் காரணங்காட்டிப் பொருந்தாதெனவிளக்கினர். இளம் பூரணருரையில் இப்பகுதி குறிப்பிட்டபடியே காணப்படுகிறது.

மொழிமரபு, "குறுமையு நெடுமையும்" என்னும் சூத்திரவுரையில், அவர், "இனி உரையாசிரியர் புகர் புகழ் எனக் குறிலிணைக்கீழ் ரகார ழகாரங்கள் வந்த தொடர்மொழிகளெல்லாம் தார் தாழ் என்றாற்போல ஓசையொத்து நெட்டெழுத்தின்றன்மைபவாம் என்று" ரெனக் காட்டியது இளம்பூரணருரையினுமுள்ளது.

புள்ளிமயங்கியல், "இலமென்கிளவிக்கு" என்னும் சூத்திரத்தில் "இதனை இலத்தாற்பற்றப்பட்ட புலவரென வேற்றுமையென்றாரா லுரையாசிரிய"ரென்று குறித்திருப்பதும் இளம்பூரணருரையில் மாறுதலின்றிக் காணப்படுகிறது.

இங்ஙனமே மற்றுஞ் சிலவிடங்களிலும் நச்சினார்க்கினியரால் உரையாசிரியருரையென்று காட்டப்பட்ட பகுதிகள் அச்சிட்ட இளம் பூரணருரையி லமைந்துள்ளன,

ஆதலின் இவற்றையெல்லாங்கொண்டு நோக்குமிடத்து உரையா சிரியருரையும் இளம்பூரணருரையும் ஒன்றேயாபென்று விளக்கமுறுவதுடன் உரையாசிரியருரையானது ஏடெழுதுவோராலும் பிறராலும் செய்யப்பட்ட பலமாறுதல்களாகிய கூட்டல் கழித்தல்களுக்குட்பட்ட தென்றுங் கொள்ளக்கிடக்கிறது.

இக்கூறிய வேறுபாடுகளெல்லாம், அடியார்க்குநல்லார், நச்சினார்க் கினியர் இவர்களுக்கும் நமக்கும் இடைப்பட்ட காலவரையறைக்குட் பட்டனவாகும். இனிச் சொல்லதிகார வுரையாசிரியருரையின்கண்ணே ஆசிரியர் சேனாவரையர்காலத்துக்குமுன்னும் பற்பல வழூஉக்கள் இடம்பெற்றிருந்தன வென்பது ஆராய்ந்தறியப்படும்.

சேனாவரையர் உரையாசிரியருரைப்பிரதியிற் பிறரால் சேர்ந்த பல வகைவழூஉக்களையும் முன்னொடுபின்மலைதல் முதலிய காரணங்களால் ஆய்ந்தறிந்து அவற்றின் பொருந்தாமை நன்குவிளக்கி "அவர்க் கது

கருத்தன்று" என்றும் "அவ்வுரை போலியுரை" என்றும் அவை இடைச் செருகல் என்ற கருத்தினையே யுட்கொண்டு பலவிடங்களிலும் எழுதிச் செல்வர்.

தொல்காப்பியச் சொல்லதிகாரம் "உயர்திணை என்மனார்" என்னுஞ் சூத்திரத்துச் சேனவரையருரையி லிக்கருத்து நன்கு வெளியாதல் காண்க. அதனைத் 'தொல்காப்பியக் கல்லாடருரை' என்ற ஆராய்சசியில் எடுத்துக் காட்டினேன். அது நிற்க. அச்சூத்திரத்திலேயே "இன் சாரியை வேற்றுமையுருபுபற்றியும் பற்றாதும் நிற்குமென் றுரையாசிரிய ரிரண்டாவது விரித்தா"ரென்று எடுத்துக்கொண்டு "செலவினும் வரவினும் தரவினும்" என்புழியும் பிறாண்டும் உரையாசிரிய ருண்மைப் பொருள்கூறியிருப்பதனைக்கொண்டு "அவர்கக்கது கருத்தன்"றென்று நிரூபித்துள்ளார். அவர்க்கது கருத்தன்றென்று கூறினல் அஃதிடைச் செருகலான பிறர்கருத்தென்பது சொல்லாமையே அமையும். அங்ஙன மின்றி முன்னொடுபின்முரணுமாறு உரையாசிரியர் பொருளுரைத்தா ரென்பதே சேனவரையர்கருத்தாகுமா? அஃ தவர்கருத்தாயின் "ஆடூஉவறி சொல்" என்னுஞ் சூத்திரவுரையினும் பிறவிடங்களிலும் அவருரை யினையேகொண்டு தமது கொள்கையை வலியுறுத்தல் யாது பயனுடைத் தாம்? அன்றியும், அவர், உரையாசிரியர் நுணுகிய வுணர்வுடையரென்பது தோன்ற "மாணாக்கர்க் கறிவுபெருக்கல்வேண்டி உய்த்துணரவைத்துச் செல்லுத லவர்க்கியல்பென்க" என்று கூறியிருப்பதும் பொருளில்லாத பொய்யுரையாகுமா?

இங்ஙனமே "செப்பும்வினவும்" என்பது முதலாகப் பல சூத்திரங் களிலும் சேனவரையர் 'அவ்வுரை போலியுரை' என்று கூறுவதை முன் னும்பின்னும்கொண்டு உற்றுநோக்கின், அவர் அவ்வழுஉக்களையெல்லாம் அறியாதார் இடைச்செருகியனவாகக் கொண்டாரென்பதே இனிது விளங்கும். இங்ஙனமே மேலும் நோக்கிக்கொள்க. அவற்றையெல்லாம் ஈண்டு விரிப்பிற் பெருகும்.

இதுகாறுங் கூறியவற்றால், உரையாசிரியரும் இளம்பூரணரும் ஒரு வரேயாவரென்பதும் "அறிதற்கரிதாகிய தொல்காப்பியக்கடலைத் தம் மதிவலிகொண்டு கடைந்து முதன்முதல் இலக்கணவமுதமளித்த பெரியோ"ராகிய இளம்பூரணருரை மிகுந்தசிறப்புடன் போற்றத்தகுவ

தென்பதும், அதன்கண்ணே அறியாதார் சிலர் தமக்குத்தோன்றியவாறு புகுத்தெழுதிய வழுஉக்கள் பல முற்காலத்தும் பிற்காலத்தும் இடம் பெற்றன என்பதும், பிறவும் நன்குவிளங்கும்.

இவையெல்லா மின்னமாதலை முற்றிலும் மறைக்கப் புகுந்தாராய்ச் செந்தமிழ்த்தொகுதி 18, பக்கம் ௪0டு-ல் "இலக்கணவுரைபோன்ற விசேஷ நூல்களில் (Technical works) இடைச்சேருகல் உளதாதல் மிகவும் அரிதாம்" என் றெழுதினரு முளர். இலக்கண நூலாகிய நம்பி யகப்பொருளின்கண்ணே தஞ்சைவாணன்கோவைச்செய்யுட்கள் இடைப் புகுந்ததும், இறையனார்களவியலுரையில் சரித்திரவாராய்ச்சியிற் புகு வாரை இடர்ப்படுப்பனவாய சில பிற்காலச்செய்யுட்கள் சேர்க்கப்பெற் றிருத்தலும் அறியத்தக்கன.

இவைபோலவே உரையாசிரியருரையின்கண்ணும் இடைச்செருக லுண்டென்பதும், அவ்வுரையாசிரியருரையில் நன்மதிப்புடைய சேனா வரையர் போலியுரையென்று காட்டும் பகுதிகள் சேனாவரையர்கருத்தால் உரையாசிரியருரை யல்லவென்பதும் நன்கறியலாகும்.

T. N. அப்பனையங்கார்.

மதுரை.

உ

## வாழ்த்து.

---

தேனினு மினிமை மிக்குந் தீஞ்சுவை யூறுஞ் செஞ்சொற்
பானலங் கலந்த போதம் பாவு "செந்தமிழ்" பல்லாண்டு
மேனலம் பூக்க வாழ்ந்து விழுமிய புகழ்கொண் டோங்கி
மாநிலந் தவர்க்குக் காட்சி வழங்குக சிறந்து மன்னோ!

ஆர். ஆர் குணரத்நம் B. A.

---

# கூட்டுறவுமுறையின்வரலாறும் அதனைவளர்க்கும் முறையும்.

(எக-ம் பக்கத்தொடர்ச்சி.)

## 6. பலவகைச்சங்கங்களும், சங்கங்களின்சங்கங்களும்.

இதுவரையிற் கூறியதுகொண்டு இந்தியா, ஜர்மனி, இங்கிலாந்து என்ற மூன்றுதேசங்களிலும் இந்தக்கூட்டுறவுஇயக்கம் எப்படித் தோன்றிப் பரவிவருகின்றது என்பதும், அவற்றுள்ளும் பிற்கூறிய இரண்டு தேசங்களுமே உலகமுழுவதுக்கும் இந்த இயக்கத்திற்கு வழிகாட்டியாக இருக்கின்றன என்பதும், இந்த இயக்கத்தைக் கைக்கொண்டால் அது, பலவழிகளிலும் ஏழை ஜனங்களுக்குப் பேருதவிபுரிந்துவரும் என்பதும், 'உலகத்தில் நியாயமில்லை; நமக்குநியாயங்கிடைக்காது' என்று நம்பியிருந்த பாமரஜனசமூகத்தார் தங்களது ஜீவாதாரஉரிமையை நிலைநிறுத்தி நியாயத்தைப்பெற இதனை ஒருசாதனமாகக் கண்டுபிடித்தனர் என்பதும், பிறவும் ஒருசிறிது விளங்கும். இனி, இந்த இயக்கத்தைப் பற்றி ஆராயவிரும்புவோர் 'கூட்டுறவுமுறை என்றால் என்ன? கூட்டுறவு மளிகை, கூட்டுறவுப்பொக்கிஷசாலை, கூட்டுறவுத்தொழிற்சாலை என்றவற்றிற்கும் தனித்துநடத்தப்படும் மளிகை, பொக்கிஷசாலை, தொழிற்சாலை என்றவற்றிற்கும் உள்ள வேறுபாடு என்ன?' என்ற வினைக்களுக்குச் சரியானவிடையை அறிந்துகொள்ளவேண்டும்.

இந்த இயக்கமோ மனிதர்களுக்கு இயற்கையான சகோதரப்பான்மையை வளர்ப்பது; எவரையும் வேண்டிக்கொள்வதேதவிரக் கட்டாயப்படுத்துவதன்று; சாந்தமாகவே தொழிலைநடத்திவருவது; பல ஏழைகளும் ஒன்றுசேர்ந்து பொருளாளர்களால்வரும் கஷ்டத்தைத் தடுத்துக்கொள்ளமுயல்வது; பிறரைத் துன்புறுத்தக்கூடும் பலசாலிகள்கூட்டம் போலாகாமல் தங்களைத் தாங்களே காத்துக்கொள்ளப் பல ஏழைகள் ஒன்றுசேர்ந்து தொழில்செய்வது; ஒருவருடைய அல்லது ஒரு கூட்டத்தாருடைய லாபத்தைமாத்திரம் கருதாமல் சேர்ந்த எல்லார்க்கும் லாபத்தைக்கொடுத்துவருவது; அதிகம் சொல்லுவானேன்; 'எல்லார்க்கும் ஒருவர்; ஒருவர்க்கு எல்லாரும்' என்பதே இந்த இயக்கத்தின் உயிர்நிலையான கொள்கை.

இந்தக் கூட்டுறவுச்சங்கங்களை ஐந்துவகையாகப் பகுக்கலாம். அவை:—

1. கடன் கொடுத்துவாங்கும் சங்கங்கள்.
2. விவசாயிகளுக்கு உபயோகமாகும் சங்கங்கள்.
3. கூட்டுறவுப் பண்டகசாலைகள்.
4. விடுகள்கட்டிக்கொள்வதற்கு உதவக்கூடிய கூட்டுறவுச் சங்கங்கள்.
5. தொழிலாளர்களுக்கு உபயோகப்படக்கூடிய கூட்டுறவுச் சங்கங்கள்.

கூட்டுறவு என்பது உலகத்தில் நடைபெறுகிற எல்லாத்துறைகளிலும் உபயோகப்படுத்தக்கூடிய ஒருமுறையாகும். ஆதலால் உலகத்திலுள்ள எல்லாக்கூட்டுறவுச்சங்கங்களையும் மேற்கண்ட ஐந்துவகைக்குள் அடக்கி விடலாம். இனி, அந்த ஐந்துவகைச்சங்கங்களையும்பற்றிக் கூறுவது பொருத்தமானது.

1. கடன்கொடுத்துவாங்கும்சங்கம்:— இது, கடன்வாங்குவோர்களது சங்கமாகும். இதன் நோக்கம், அதிகவட்டிக்குக் கடன்கொடுத்துக் கடன்பட்டோரைத் துன்பத்திற்குள்ளாக்கும் முதலாளிகளிடமிருந்து விடுதலைபெறுவதுடன், இனிக் கடன்வாங்காதநிலையி லிருக்கவும் செய்தல்.

2. விவசாயிகளுக்கு உபயோகமாகும் சங்கம்:—இதன் நோக்கம், தன்னிடம் அங்கத்தினர்களாயிருக்கும் எல்லா விவசாயிகளுக்கும் முற்கூறிய நன்மையைச் செய்வதோடு, உழுதொழிலுக்குவேண்டிய கருவி, கால்நடை, விதை முதலாயவற்றை வாங்கிக்கொள்வதற்கும் உதவிபுரிதல், தனித்தனியாகவாங்குவதைக்காட்டிலும் மொத்தமாக வாங்குவதால் கிடைக்கும்லாபத்தை அடைவித்தல்.

3. கூட்டுறவுப்பண்டகசாலை:—இது, உணவுப்பொருள், உடைமுதலியவற்றை வாங்கி உபயோகப்படுத்துபவர்களது சங்கமாகும். இதன் நோக்கம், வியாபாரிகளிடத்திற் சாமான்களைக் கடனுக்கு வாங்குவதால்வரும் தீமையினின்றும் நீக்கிக்கொள்ளுதல்; சரியானவிலை, அளவு,

நிறை இவைகளுடன் சுத்தமான சாமான்கள் அங்கத்தினர்களுக்குக் கிடைக்குமாறுசெய்தல்; இதனால் கிடைக்கும் லாபத்தைக்கொண்டுமுதல் சேர்த்து அங்கத்தினர்களுக்குப் பொதுவாக விளைநிலங்களைவாங்கல், வேண்டியபொருள்களை உண்டாக்கல், தொழிற்சாலைகளை ஸ்தாபித்தல் என்பன.

4. வீடுகள்கட்டுவதற்கு உதவக்கூடிய சங்கம்:—இது, குடியிருக்க வீடில்லாதவர்க்கு வீடுவாங்கிக்கொள்ளப் பணங்கொடுத்துச் சிறிது சிறிதாகவாங்கிக்கொள்ளுதல் என்னும் நோக்கமுள்ளது.

5. தொழிலாளர்களுக்கு உதவும் சங்கம்:—இது, கூலிக்குவேலை செய்து ஜீவனம்பண்ணும் எல்லாத் தொழிலாளர்களும் ஒன்றுசேர்ந்து குறைந்த கூலிகொடுத்துவரும் முதலாளிகளிடமிருந்து தப்பித்துக் கொள்ள உதவிபுரிவது. 'வேலைசெய்யாமலேயே சுகமாக ஒருகூட்டத்தார் வாழ்வதும், வேலைசெய்து ஒருகூட்டத்தார் வாழ்வதும், வேலைசெய்தும் ஒருகூட்டத்தார் கஷ்டத்தையே பெற்று வாழ்வதும், தரித்திரராகவே ஒருகூட்டத்தார் வாழ்வதும் உலகத்தில் அநியாயமானவை; ஆதலினாலே இம்முறையைப் போக்கவேண்டும்' எனக் கருதி ஒன்றுகூடி முதல்சேர்த்துத் தொழில்செய்தல் இதன் நோக்கமாகும்.

இவற்றைத் தவிர எல்லாச்சங்கங்களையும் மேற்பார்ப்பதற்காகச் சங்கங்களின் சங்கங்களும் உண்டு. அவை:—மூன்றுவகைப்படும். கடன் கொடுத்துவாங்கும் சங்கங்களுக்கு உதவிபுரியப் 'பாங்கிங்யூனியன்' என்றும், உணவுப்பொருள் முதலியவற்றை விற்றுவரும் கூட்டுறவுப்பண்டகசாலைகளுக்கு உதவிபுரிய 'டிரேடிங்யூனியன்' என்றும், பிரசாரவேலையும், பிற மேற்பார்வையும் செய்ய 'சூப்ரவைஸிங்யூனியன்' என்றும் அவை பெயர்பெறும். இவற்றிற்கெல்லாம் மேற்பட்ட 'மகாசங்கம்' ஒன்றும் உண்டு. இவையெல்லாம் ஜர்மனியில் இன்றும் நடைபெற்றுவருகின்றன. இங்கிலாந்தில் எல்லாக்கூட்டுறவுப் பண்டகசாலைகளுக்கும் உதவக்கூடிய ஹோல்ஸேல்சொஸைட்டி என்ற 'மொத்தக்கூட்டுறவு மளிகை'யும் எல்லாச்சங்கங்களையும் மேற்பார்க்கவும், பிரசாரவேலைசெய்யவும் ஏற்பட்ட 'சூப்ரவைஸிங்யூனியன்' என்ற சங்கமுமாக இரண்டு சங்கங்களின் சங்கங்கள் உள. இந்தியாவிலும் இம்மாதிரியான சங்கங்களின் சங்கங்களை ஸ்தாபித்திருக்கிறார்கள். ஆனால், இந்தியாவில் அவ்விடங்களில் இருக்

கும் மாதிரியில் அவை ஸ்தாபிக்கப்படவில்லை. அங்கே, பல சிறுசங்கங்கள் தோன்றி அவற்றிற்கு 'இத்தகையசங்கங்களின் சங்கங்கள்தேவை' என்று தோன்றியபின்னர் ஸ்தாபிக்கப்படுகின்றன. இந்தியாவிலோ முன்னர்ச் சங்கங்களின் சங்கங்களை ஸ்தாபித்துப் பின்னர்ச் சிறுசங்கங்களை ஸ்தாபிக்க முயலுகின்றனர். இந்தியாவில் இந்த இயக்கம் வளராதிருப்பதற்கு இதுவு மொரு தடை. மேலும், இந்தியாவில் அந்தச்சங்கங்களுக்குப் பெயர்கொடுத்து வருவதே பொதுஜனங்களைச் சந்தேகத்திற்கு உள்ளாக்குவதாயிருக்கிறது. இதுவும் ஒரு தடைக்காரணம். இவ்விஷயத்தில் அதிகாரிகளும் பிறரும் சேர்ந்து ஒரு நல்ல ஏற்பாடுசெய்வது விரும்பத்தக்கது. பொதுவாக நம் தேசத்திலுள்ள சங்கங்களெல்லாம் துரைத்தனத்தாரின் உதவியையும், பிறர் உதவியையுமே நாடிக்கொண்டிருக்கின்றன. ஆனால், கூட்டுறவுப்பண்டகசாலை விஷயத்தில் மாத்திரம் 'உத்தியோகஸ்தர்கள் அவற்றை ஸ்தாபிக்க எவ்வித முயற்சியும் செய்யலாகாதென்றும், சென்ட்ரல்பாங்குகள் அவற்றிற்குக் கடன்கொடுத்துதவல் கூடாது' என்றும் விதிசெய்திருக்கிறார்கள். அது, பண்டகசாலைகளின் வளர்ச்சிக்கு உதவியாகவே இருந்துவருகிறது.

## 7. சாசுவதநிதிகளும், சீட்டுகளும்,

இதுவரையில் மேல்நாடுகளிலிருந்தே பலவகைச் சங்கங்களும் தோன்றின என்பது கூறப்பட்டது. இனி, நமது இந்தியாவுக்குச் சொந்தமான சங்கங்களைப்பற்றிக் கூறுவது பொருத்தமானது. இந்தியாவில் 'லோன்சொஸைட்டி'கள்போன்ற சீட்டுகளும், 'அர்பன்பாங்கு'கள் போன்ற சாசுவதநிதிகளும் இருந்துவருகின்றன. சீட்டுகள் கிராமவாசிகளுக்கும், நிதிகள் மாதவரும்படியுள்ள நகரவாசிகளுக்கும் உபயோகப்பட்டு வருகின்றன. இந்தச் சீட்டு நிதி இவற்றின் கொள்கைகளிற் சிலவற்றைக் கூட்டுறவுச்சங்கத்திலும் சேர்த்திருக்கிறார்கள். எனினும் கூட்டுறவுச்சங்கத்தார் இவற்றைச் சரியாக எண்ணுவதில்லை. அது தவறானது. நிற்க, இனியேனும் இவ்விரண்டையும் கூட்டுறவுச்சங்கத்துடன் சேர்த்துநடத்துவது நலமானது. இந்த நிதிகளைச் சிலர் 'வீடுகட்டப் பொருளுதவும் சங்கங்கள்' என்றும் புகழ்ந்து கூறுகிறார்கள். இத்தகைய நிதிகளின்உதவியால் வீடுவாங்கியவர்கள் பலர் பட்டணங்களில் இருக்கின்றனர். சீட்டுகளால் மலையாளம், திருநெல்வேலி முதலிய இடங்களிலுள்ளவர்கள் பெரிதும் நன்மையடைந்துவருகிறார்கள். மதுரை,

திருவல்லிக்கேணி முதலிய இடங்களிலுள்ள கூட்டுறவுச்சங்கங்கள் இந்தச்சீட்டின் நன்மைகளை அறிந்து தாங்களும் ஸ்தாபித்து நன்மை அடைந்து வருகின்றன. நிதி, சீட்டு என்ற இரண்டுஸ்தாபனங்களிலும் வட்டி அவரவர்களுடைய தர்மசிந்தனைக்கேற்ப இருந்துவருகின்றது. இவற்றை முற்கூறிய நிக்கில்ஸன் துரையவர்களும் புகழ்ந்திருக்கின்றனர்.

## 8. 1912-ம் வருஷத்துப் புதிய கூட்டுறவுச்சட்டம்.

1904-ம் வருஷத்திய பத்தாவது சட்டம், விவசாயிகளுக்குக் கடன் கொடுத்துவருவது ஒன்றையே தனது கடமையாகக்கொண்டிருந்தது. இந்நிலையில் இந்த ராஜதானியிற் சில கூட்டுறவுப்பண்டகசாலைகள் தோன்றித் தங்களுக்கும் இடம் தரவேண்டின. அவற்றுள், திருவல்லிக்கேணி, மதுரை, கோயம்புத்தூர் முதலிய நகரங்களிலுள்ளன முக்கியமானவை. இவற்றின் வேண்டுகோளுக்கிணங்கிச் சட்டத்தில் இடமில்லாமலிருந்தும் சென்னைத்துரைத்தனத்தார் தங்களுடைய விசேஷ அதிகாரத்தால் அவற்றைப் பதிவுசெய்துகொடுத்தனர். அது பெரிதும் விரும்பத்தக்கது. ஆனால் புதிதாக ஏற்பட்ட இந்தச்சட்டமோ எல்லாத் துறைகளிலும் கூட்டுறவுமுறையினாற் கிடைக்கக்கூடிய நன்மைகளை ஜனங்கள்பெறுவதற்குத் துணைபுரிவதாயிருக்கின்றது.

## 9. உலகநிலையைப் புதுப்பித்தல்.

சிலவருஷங்களுக்குமுன் மேல்நாடுகளில் நடைபெற்ற பெரியயுத்தமானது உலகத்தையே ஒருபெரிய மாறுதலுக்குள்ளாக்கிவிட்டது. உலகத்திலுள்ள பலவகுப்பினரும் வறுமைக்குள்ளாகிப் பொருளாதாரப் போராட்டத்திற்கு உள்ளாகவேண்டியதாயிற்று. இந்நிலையில் கடவுளருளால் இந்தக்கூட்டுறவுமுறை நமக்குக் கிடைத்திருக்கின்றது. இதனை நாம் சரியானவழியிற் பின்பற்றிப் பிறதேசத்தார் இம்முறையைக் கைக்கொண்டு எத்தகைய நன்மைகளைப் பெற்றிருக்கிறார்களோ அத்தகைய நன்மைகளை நாமும் அடையவேண்டியது மிக அவசியமானது. தனக்குத்தானே உதவிசெய்துகொள்ளக்கூடிய இந்த முறையைப் பின்பற்றி நடந்து நன்மையை அடைவது நம்மவர் ஒவ்வொருவருக்கும் உரிமையும் கடமையுமாகும். இதுவே உலகத்தைப் புதியநிலைமைக்கு மாற்றவல்லது.

## 10. கூட்டுறவு இயக்கத்தின் கருத்து.

உலகத்திலுள்ள மனிதர் அனைவரும் ஒருதன்மையினரே. இதனால் லாபநஷ்டங்களும், சுக துக்கங்களும் எல்லோர்க்கும் பொதுவாகவே இருக்கின்றன. ஆகையால், நாம் செய்யத்தொடங்கும் ஒவ்வொருகாரியத்தையும் முன்னர் நன்கு ஆராய்ந்து அது பொதுஜனங்கள் எல்லார்க்கும் நன்மையைச்செய்வதாயின் அதனைக் கைக்கொள்ளவேண்டும். ஒருவர்க்குத் தீமையைச் செய்வதாயினும் அதனை விட்டுவிடல்வேண்டும். இப்படிச் செய்ய உடன்படாதவர் இந்த இயக்கத்திற்குப் பொருந்துபவராகார்.

## 11. பிரசாரவேலையின் அவசியம்.

உலகத்திலே பொதுவாக ஜனத்திரளுக்கு எவ்வித தீர்மானமும் இயல்பாகவே உண்டாவதில்லை. அறிவுடையோர் எந்தவழியிற் செல்கின்றார்களோ அதனையே தாங்களும் பின்பற்றுபவர்களாய் அவர்கள் இருக்கிறார்கள். இதனால், இந்தக் கூட்டுறவுஇயக்கம் நன்கு பரவவேண்டுமானால் சாமானியஜனங்களிடத்தில் இதன் நன்மையையும் அவசியத்தையும்பற்றிப் பலமாகப் பிரசாரவேலை செய்யவேண்டியதும், ஒவ்வொரு கிராமத்திலும் கூட்டுறவுக்காரர்களைக் கண்டுபிடிப்பதும், அத்தகையினர் இல்லாவிட்டால் அவர்களை அறிவுள்ளவர்களாக்கித் திருத்துவதும் கூட்டுறவுக்காருடைய கடமையாகும். இதன் அவசியத்தை நன்குணர்ந்தே ரானைடேல் வழிகாட்டிகள் லாபத்தில் நூற்றுக்கு இரண்டரைப்பங்கை இவ்விஷயத்திற் செலவுசெய்துவருகிறார்கள். இந்தமுறையை நமது ராஜதானிக்குக் கொண்டுவந்தவர்கள் துரைத்தனத்தார்களாகையினால் அவர்கள் இந்த இயக்கத்தின்வளர்ச்சிக்குத் துணைசெய்யும்பொருட்டு இத்தகைய பிரசாரவேலைசெய்ய உதவிபுரிவதும் விரும்பத்தக்கதாம். ஜர்மனியில் இத்தகைய உதவியைத் துரைத்தனத்தார் செய்துவருகின்றனர். இங்ஙனம் செய்து பொதுஜனங்களின் அறிவை வளர்த்துக்கொள்ளாமல் மேலும் மேலும் புதிதுபுதிதாகச் சங்கங்களை ஸ்தாபித்துக்கொண்டு போதல் மேகியின்றி வண்டித்தொடரை ஓட்டுவதுபோலாகும்.

## 12. தலைவர்களின் அவசியம்.

இந்த இயக்கம் சம்பந்தமாக என்மனத்தேதோன்றியவற்றைக் கூறிவிட்டேன். எனினும் ஒருவிஷயம். எந்தக்காரியமும் தலைவன் இன்றி

# அநுபந்தம்.

## 1914-ல்.

### உலகிலுள்ள பண்டகசாலை (ஸ்டோர்)களின் விவரம்.

| எண். | தேசம். | பண்டகசாலைகளின் எண். | மெம்பர்களின் தொகை. ஆயிரக் கணக்கு. | ஆயிரஜனத் தொகைக்கு, கூட்டுறவு ஸ்டோர்களின் எண். | விற்பனை ரூ இலக்ஷக்கணக்கு. |
|---|---|---|---|---|---|
| 1 | ஆங்கிலத்தீவுகள் | 1385 | 3054 | 264 | 13062 |
| 2 | ஜெர்மனி | 2375 | 2000 | 121 | 4156 |
| 3 | ரஷ்யா | 13000 | 1500 | 34 | 4750 |
| 4 | பிரான்ஸ் | 3261 | 881 | 90 | 1905 |
| 5 | ஆஸ்டிரியா | 1471 | 500 | 70 | 1068 |
| 6 | இட்டலி | 2283 | 450 | 51 | 1009 |
| 7 | ஸ்விட்ஸர்லண்ட் | 396 | 276 | 290 | 854 |
| 8 | டென்மார்க் | 1560 | 250 | 350 | 890 |
| 9 | ஹங்கரி | 1750 | 200 | 40 | 475 |
| 10 | பெல்ஜியம் | 205 | 170 | 90 | 285 |
| 11 | ஸ்வீடன் | 608 | 153 | 108 | 362 |
| 12 | ஹாலண்ட் | 135 | 108 | 72 | 154 |
| 13 | பின்லண்ட் | 512 | 100 | 120 | 374 |
| 14 | போலண்ட் | 950 | 96 | 33 | 249 |
| 15 | ஸ்பெயின் | 200 | 40 | 30 | 95 |
| 16 | நார்வே | 172 | 39 | 42 | 136 |
| 17 | இந்தியா | 443 | .... | .... | ... |

நன்கு நிறைவேறமுடியாது. சேனாதிபதியின்றிச் சைனியம் நடைபெற முடியாதல்லவா? ஆதலின் நாம் எல்லோரும் ஒன்றுகூடி நமது இயக்கம் நற்பயனையளிப்பதற்குத் துணைசெய்யக்கூடிய தலைவர்களைக் கண்டுபிடித்தல்வேண்டும். அவர்கள் பரிசுத்தமனமுள்ளவர்களாகவும், உடல், பொருள், ஆவி என்ற மூன்றுவகையாலும் உள்ளன்போடு பொதுஜனங்களுக்குப் பாடுபடக்கூடியவர்களாகவும், நமதுகொள்கையை இனிது பரப்புவதற்குத்தக்க பேச்சுவன்மையுள்ளவர்களாகவும் இருக்கவேண்டியது மிகவும் அவசியமானது. நமது கூட்டுறவுஇயக்கம் செழித்தோங்கி உலகத்திற்குப் பெரிதும் நன்மையைச்செய்ய நாமெல்லோரும் ஒருமனதாய்க் கடவுளை வணங்கி இடைவிடாது முயலுவோமாக.

"உலகம் வேண்டுவ தொன்றே யாகும்;
என்னெனிற் கேளீர்; இயம்புவன்; அதுதான்,
அறிவும் ஒழுங்கும் அன்றே; யார்க்கும்
அன்னம் முதலாத் துன்னிய பலவுங்
கொடுத்துத வுவதாங் கொள்கையு மன்றே;
எதனையும் அழியா தெழுதும் சீரிய
கைவன் மையும் அன்றே; மெய்யோடு
உறுதியாய் உழைத்தலில் உள்ளம்
தளரா தலைமைஆண் தன்மைசேர் மக்களே."

சுபம்.

---

# அன்பு.

---

எங்கட்கினியரென்றெண்ணப்பட்டவர்
தங்கள்மேல்விருப்பம்தாமே நிகழும்
எங்கட்கியாரிடம்இச்சைநிகழுமோ
அவரிடத்தேயெமக்கன்புநிகழும்
விரும்பப்பட்டவர்மேலேநிகழும்
உள்ளநெகிழ்ச்சியேயோதுமன்பாகுட்

தந்தைதாய்மனைவிதனையாதியோர்
நங்கட்கினியாய்நவிலுவோமானால்
நீரிற்குமிழிபோல்நிலையிலாஉடம்பு
நீங்கவேதொடர்பும்நீங்கியொழியும்
உடம்புத்தொடர்ச்சியுள்ளகாலத்தும்
தீவினைப்பயன்முன்சேர்ந்தனுபவிக்க
உறவும்பகையாயுற்றுநீங்குவரே
நல்வினைப்பயனைநாமனுபவிக்கப்
பகைவரும்உறவாய்ப்படருவாரன்றோ?
தம்பயன்கருதியேதாமிதஞ்செய்வர்
ஆதலாலொருவரும்அன்பினரன்றே
நம்முயிர்க்கினியவர்நாமேயென்னில்
கேவலதசையில்கிளராணவத்தால்
அறிவுந்தொழிலும்அணுத்துணையேனும்
விளக்கமுறாதுவிரிசகலத்திலோ
சிற்றறிவாதியாற்செய்வினைபோரா
தின்பதுன்பஇயல்பெலாமுணர்ந்து
துன்பம்நீக்கிச்சுகமனுபவிக்கும்
ஆற்றலிலாமையாலன்பும்பொய்யே

ஆதலால்,

அநாதிகேவலத்தில்ஆணவமலத்தில்
உணர்வுமுதலாம்ஒன்றுமின்றிக்
கிடந்தஆன்மாக்களைக்கிருபைமேலிட்டால்
எடுத்ததன்கன்மவியல்புக்கேற்பத்
தனுகரணாதியைத்தந்துபக்குவம்
வருதற்பொருட்டேவளர்சகலந்தினில்
பலதரம்விட்டுப்பாகமாகும்
இருவினையொப்புமலபரிபாகம்
எய்தியபின்னர்எழிற்குருவாகித்
தீட்சையாற்சஞ்சிதந்தன்னைத்தீய்த்தே
யாகாமியம்அணுகாவகையருளி
ஆன்மாவுடனேஅபேதமாய்நின்றே

உடலொடுபிராரத்வத்தையும்போக்கிப்
பேரின்பமுத்திப்பேற்றினைநல்கும்
எம்பெருமானேயெமக்கினியவனும்
இக்கருத்ததனுல்"என்னில்யாரும்
எனக்கினியாரில்லையென்னிலுமினியவன்
ஒருவனுளனென்"றுரைத்தனர்மேலோர்
ஆகையால்அவரிடத்தன்புசெலுத்துக
அன்பும்பத்தியும்அபேதப்பொருளாம்
குடத்துவிளக்கும்தடத்துவாளும்போல்
காட்டக்காணும்காரியமன்றே
அன்பின்செயலாலனுமித்தறியலாம்
சிவபெருமான்றன்றிருவிளையாடலை
நினைக்கவுங்கேட்கவுங்நேர்மையாய்க்காணவும்
நேர்ந்தபொழுதெலாம்நிலைதடுமாறலும்
ஆடலும்பாடலும்அருவிசொரிதலும்
மெய்ம்மயிர்சிலிர்த்தலும்விதிர்விதிர்ப்பெய்தலும்
ஆகியஇவையெலாம்அன்படையாளமாம்
இவ்வன்புடையரேயெய்துவர்சிவனை
யிவ்வன்பிலாதாரெய்தவேமாட்டார்
நெக்குநெக்குருகிநினைப்பவர்நெஞ்சுளே
புக்குநிற்கும்புண்ணியனென்றனர்
என்பேவிறகாஇறைச்சியையறுத்துப்
பொன்போற்கனலிற்பொரியவறுப்பினும்
அன்போடுருகியகங்குழைவார்க்கலால்
என்பொன்மணியையெய்துதலரிதாம்
பற்பலபிறப்பிற்பயன்குறியாது
செயும்புண்ணியத்தாற்றிகழுமிவ்வன்பே
அன்பின்முதிர்ச்சியில்அரனுர்விளங்குவர்
முதலிடைகடையெனமூவகையன்பாம்
நாயகன்நாமம்நாயகிகேட்கவும்
தன்வசமழிதல்தலையன்பாகும்
கணவனைக்காணவுங்கூடவுங்கரைதல்

இடைகடையன்பென்றிசைத்தனர்மேலோர்
மந்தபக்தியும்மந்ததரமும்
தீவிரபக்தியும்அதிதீவிரமும்
பக்திநால்வகையாய்ப்பகர்ந்தனர்மேலோர்
குடிம்த்தேவரைக்கும்பிடலாமென
நாணன்நவிலநாகன்குமாரன்
தன்வசமழிந்தது தலையன்பன்றோ?
காளத்திநாதர்கடைக்கணைக்கெய்தலும்
அன்பேயுருவமாய்அப்பனைத்தழுவி
மூவகையன்பும்முறுகிவளர
இரும்புபொன்னாகியவற்றம்போலச்
சிவச்செயல்போய்ச்சிவச்செயலாகி
ஆறுதினங்களிலானடியடைந்த
கண்ணப்பரன்பைக்கழறவும்போமோ
வாகுணரன்பைவழுத்தவும்போமோ
மானிடர்நிற்கமற்றுளபிராணியில்
ஈயும்எறும்பும்புலியும்இபமும்
நாகமுங்குரங்கும்நன்றுகொள்பசுவும்
காகமுங்கழுகுங்கானகமயிலும்
நாரையுமணிலும்நவிலும்சிலந்தியும்
அன்பினாலேயரனையர்ச்சித்துப்
பொருள்பெற்றபெருமையெல்லாம்
அதனைத்தன்பெயராலமைந்ததலங்களே
இன்றும்சான்றாயிலகுறுமன்றோ?
ஆதலாற்சிவனிடத்தன்பைச்செலுத்திச்
சிவச்செயலெல்லாம்சிவச்செயலாகப்
பேரின்பமுத்திப்பேற்றினையடைந்து
உய்குதும்உய்குதும்உய்குதும்யாமே.

ஜி. சதாசிவம்பிள்ளை.
நாஷனல் ஹைஸ்கூல் தலைமைத்தமிழ்ப்பண்டிதர்
நாகபட்டணம்.

உ

கணபதி துணை.

# அன்பு.*

அன்பு:—ஒருவர்பாலொருவர்வைக்கும் பற்று.—இதற்குப் பரிவு, நார், வாரம் முதலாய பெயர் நிகண்டிற் கூறப்படும். இவ்வன்பு, இல்லறத்தார்க்குந் துறவறத்தார்க்கும் வேண்டும்.

“அருளென்னு மன்பீன்குழவி” என்றதற்கு அன்பினாலீனப்பட்ட அருளென்னுங் குழவி என வுரைகூறினமையால், அன்பினாலே அருளுண்டாமென்றறிக.

உயிரானது உடம்போடியைந்தல்லது அன்பு செய்யலாகாமையின் அவ்வன்புசெய்தற்பொருட்டு உடம்போடுண்டாகிய தொடர்ச்சி உயிர்க்குளதாயிற்று என்பது விளங்க “அன்போடியைந்தவழக்கென்ப வாருயிர்க்—கென்போடியைந்ததொடர்பு” என்றார் திருக்குறளில். இனி, இராமாயணத்திலும்,

“என்பென்பதியாக்கையென்பதுயிரென்பதிவைகளெல்லாம்
பின்பென்பவல்லவேனுந்தம்முடைநிலையிற்பேரா
முன்பென்பவுளவென்றாலுமுழுவதுந்தெரிந்தவாற்றா
லன்பென்பதொன்றின்றன்மையமரருமறிந்ததன்றால்”

எனக் கூறுதல் காண்க.

இனி, அன்பில்லாரையும், அன்புடையாரையுங் கூறுங்கால், “அன்பிலாரெல்லாந்தமக்குரியரன்புடையா—ரென்புமுரியர்பிறர்க்கு” என்றார் திருக்குறளில்; தமக்குரியர்என்பதற்கு “எல்லாப்பொருளானுந் தமக்கேயுரியர்” எனவும், “என்பு முரியர்பிறர்க்கு” என்பதற்கு “அவற்றானேயன்றித் தம்முடம்பானும் பிறர்க்குரியர்” என்றும் பொருள்படக் கூறினார்; என்புமுரியார் சிபி, ததீசி முதலாயினோரென வறிக.

---

* இது, தேவகோட்டை, பெரியஊமனர் ஸ்ரீமான்-இராமநாதச்செட்டியாரவர்கள் வேண்டுகோளின்படி திருக்கோயிலிற்செய்த உபந்யாசத்தைச் சுருக்கியெழுதப்பட்டது.

இஃ திங்ஙனமாக, சிவஞானசித்தியாரில், "ஈசனுக்கன்பில்லா ரடியவர்க்கன்பில்லா ரெவ்வுயிர்க்கு மன்பில்லார்தமக்குமன்பில்லார்" எனக் கூறலால், அன்பிலாரெல்லாந் தமக்குரியர் என்பதற்கு மாறு படுமோவெனில், மாறுபடுதலில்லை; திருக்குறளிலே தமக்கு என்றது உடம்புக்கு எனவும், சித்தியாரில், தமக்கு என்றது உயிர்க்கு எனவும், பொருள்படுதலா லெங்க. ஈசனுக்கன்பில்லா ரடியவர்க்கன்பில்லார் என்பதற்கு, காமுகனொருவன் ஓர் வனிதையிடத் தன்புடையானென் பது அவள் சுற்றத்தாரைக் கண்டாலுண்டாகு மன்பினளவுபற்றியே தெளியப்படும். அடியவர்க் கன்பில்லார் ஈசனுக் கன்புடையாராயொ ழுகுதல் நாடகமாத்திரையேயன்றிப் பிறிதில்லையென்க.

"எவரேனுமுருத்திரசாதனங்கண்டாலெதிர்வணங்கி
யவரேநம்பிறப்பறுக்கவடிவெடுத்தவரனென்று
கவராதவன்புள்ளங்கசிந்துருகியருச்சித்துச்
சுவைபாரின்னமுதருத்தியெஞ்சியவின்சுவைதெரிவான்"

"சிவனடியார்க்கன்பிலாச்சிந்தையேயிரும்பேவல்செய்தநாளு
மவனடியாரிடத்தொழுகாவாக்கையேயமரஞ்செவிகண்ணுதியைந்தும்
பவனடியாரிடைச்செலுத்தாப்படிவமேபாவைமறைபரவுஞ்சைவ
தவநெறியல்லாநெறியேபவநெறியென்றளியளாய்த்தளர்வாள்பின்னும்"

என்றும, இளையான்குடிமாறநாயனுர் புராணத்தில்,

"ஆர மென்பு புனைந்த வையர்த மன்ப ரென்பதோர் தன்மையா
னேர வந்தவர் யாவ ராயினு நித்த மெய்திய பத்திமுன்
கூர வந்தெதிர் கொண்டு கைகள் குவித்து நின்று செவிப்புலத்
தீர நன்மது ரப்பதம்பரி வெய்த முன்னுரை செய்தபின்"

"கொண்டுவந்துமனைப்புகுந்துகுலாவுபாதம்விளக்கியே
மண்டுகாதலினாதனத்திடைவைத்தருச்சனைசெய்தபி
னுண்டிநாலுவிதத்திலாறுசுவைத்திறத்தினிலொப்பிலா
வண்டர்நாயகர்தொண்டரிச்சையிலமுதுசெய்யவளித்துளார்"

என்றும், பிறவுங் கூறலா லன்புடைமை தெளியப்படு மெங்க. "எவ்வுயிர்க்குமன்பில்லார்" என்பதற்கு - எவ்வுயிர்க்கண்ணு முளனு கிய ஈசனிடத் தன்புடையார்க்கே அத்தொடர்புபற்றி அன்புடைய ராதல் கூடுமெங்க, தமக்கு மன்பில்லார் என்பதற்கு-இவ்விடங்களிலே

அன்பில்லாதார் தம்முயிர்க் குறுதிசெய்துகொள்ளுபவ ரல்லரென்க. எதிர்மறைமுகத்தா லன்புடையார்பெருமை கூறியவாறு காண்க. ஆதலால், அன்பினைப்பார்க்கினு முயர்வுடையதொன்றில்லை; இதனை, இராமாயணத்தில்,

"என்புதோலுடையார்க்குமிலார்க்குந்தம்
வன்பகைப்புலன்மாசறமாய்ப்பதென்
முன்புபின்பின்றிம்மூவுலகத்தினு
மன்பினல்லதோராக்கமுண்டாகுமோ"

எனக் கூறுதல் காண்க.

இவ் வன்பு, தலையாயார்மாட்டும், இடையாயார்மாட்டும், கடையாயார்மாட்டுஞ் செய்யப்படுமென்க.

தலையாயார்மாட்டுச் செய்யுமன்பின் மேலாயினது சிவபிரான் மாட்டுச் செய்யு மன்பென்க.

எத்துணைத் தவமுதலாயினசெய்யினும் அன்பில்லாவழிச் சிவபிரானை யடையமுடியாதென்பதனை,

"என்பே விறகா விறைச்சி யறுத்திட்டுப்
பொன்போற் கனலிற் பொரிய வறுப்பினு
மன்போ டுருகி யகங்குழை வார்க்கன்றி
யென்பொன் மணியினை யெய்தவொண் ணாதே"

எனத் திருமந்திரத்திற் கூறியதனாற் காண்க.

அன்பிலார்செய்யும் பூசைமுதலியனவற்றைச் சிவபிரான் திருவுளமகிழ்ந்துகொள்ளா ரென்பதனை,

"ஆசறுமனத்தெழுமன்பையன்றியே
பூசனையுவக்கிலன்புராரிசென்னிமேல்
வீசுறுதிரையினுநிக்கமேவுசொலா
பூசல்செய்மனமுடையொருவனுட்டுநீர்"

என்பதனாற் காண்க. "பொக்கமுடையார்செய்யும்பூசைதவங்கண்டு நகும்புராணபோற்றி" என்பதனானு மறிக

இனி, மெய்யன்புடையாரியல்புகூறுங்கால்,

"எனைத்துயிர்க்குமுறுதியிகபரமென்பவவைகொடுப்பானெல்லாந்தானு
யனைத்துயிர்க்குமுயிராகுமரனெனபவவனறிவார்க்கங்கம்வாக்கு
மனத்தூறுமெய்ப்பத்திவழிவருமென்பவப்பத்திவழிநிற்பார்க்கு
வினைத்துயர்தீர்த்திடவெடுத்தவடிவென்பதவனடியார்வேடமன்றோ"

என அடியார்வேடத்தைச் சிந்தைசெய்து,

"ஈசருக்கே யன்பானார் யாவரையுந் தாங்கண்டாற்
கூசிமிகக் குதுகுதுத்துக் கொண்டாடி மனமகிழ்வுற்
றாசையினா லாவின்பின் கன்றணைந்தாற் போலணைந்து
பேசுவன பணிந்தமொழி யினியனவே பேசுவார்"

"யாதானு மிவ்வுடம்பாற் செய்வினைக ளேறுயர்த்தார்
பாதார விந்தத்தின் பாலாக வெனும்பரிவாற்
காதார்வெண் குழைபவர்க்காம் பணிசெய்வார் கருக்குழியிற்
போதார்க ளவர்புகழ்க்குப் புவனமெலாம் போதாவால்"

("புவனமெலாம் போதாவால்" என்பதற்கு இடம் போதாவென்றும், விலைபோதாவென்றுங் கூறுவர். பணி - திருமெழுக்கு முதலாயின.)

"ஈசனையே பணிந்துருகி யின்பமிகக் களிப்பெய்திப்
பேசினவாய் தழுதழுப்பக் கண்ணீரின் பெருந்தாரை
மாசிலா நீறழித்தங் கருவிதர மயிர்சிலிர்ப்பக்
கூசியே யுடல்கம்பித் திடுவார்மெய்க் குணமிக்கார்."

"நின்றாலு மிருந்தாலுங்கிடந்தாலு நடந்தாலு
மென்றாலுந் துயின்றாலும் விழித்தாலு மிமைத்தாலு
மன்றாடுமலர்ப்பாதமொருகாலுமறவாமைக்
குன்றாதகுணமுடையார்தொண்டராங்குணமிக்கார்"

எனப் பெரியபுராணத்திற் கூறியவாறும், பிறவுங் காண்க.

எல்லாவற்றையுமொழித்து, இவ்வன்பேவேண்டுமென்று பெரியோர்பலருங் கூறுவர்.

"உத்திவாளரா முடித்தபால்வண்ணனேயுனது
பத்திவேண்டுவதன்றியோர்கிடைப்படியனு
முத்திவேண்டிலேன்றுறக்கமும்வேண்டிலேன்முனிவர்
சித்திவேண்டிலேன்வேண்டிலேன்றிசாதிபர்சிறப்பே"

"இறவாதவின்பவன்புவேண்டிப்பின்வேண்டுகின்றார்
பிறவாமைவேண்டுமீண்டும்பிறப்புண்டேலுன்னையென்று
மறவாமைவேண்டுமின்னும்வேண்டுநாயகிழ்ந்துபாடி
யறவாநீயாடும்போதுன்னடியின்கீழிருக்கவென்றார்" என்றும்,

"புழுவாய்ப்பிறக்கினும்புண்ணியாவுன்னடியென்மனத்தே
வழுவாதிருக்கவரந்தரவேண்டும்"

"பூதம்யாவுநிலையிற் கலங்கினு
மாதோர்பாகர்மலர்த்தாண்மறப்பிலா
ரோதுகாதலுறைப்பினெறிநின்றார்
கோதிலாதகுணப்பெருங்குன்றனார்" என்றும்,

(காதலுறைப்பென்பதற்குப் பத்திவைராக்கியமென்க.)

"கேடுமாக்கமுங்கெட்டதிருவினு
ரோடுஞ்செம்பொனுமொக்கவேநோக்குவார்
கூடுமன்பினிற்கும்பிடலேயன்றி
வீடும்வேண்டார்விறலின்விளங்கினார்"

என்றும் பிறவுங் கூறுதல் காண்க.

இனி, 'அன்பேசிவமா'மென்பதற்குத் திருமந்திரத்தில், "அன்பு சிவமிரண்டென்பரறிவிலார்" என்றும், திருவாசகத்தில், "அன்பினில் விளைந்தவாரமுதே" என்றும் கூறுதல் காண்க

பத்தரெனினும், அன்பரெனினும் பொருளொன்றேயென்பதும், சிவபிரானும் அவ்வன்பருக் கன்பராய் வேண்டியவா றருள்வா ரென்பதும் "பத்தர்மொழிப்பகுதிசேவையினைக்கூறும்பரிசாலீசன்-பத்தரவர்க்கினியசேவனெயாதலின்" எனக்காஞ்சிப்புராணத்திலும், "வேண்டுவார்வேண்டியதேயீவான்கண்டாய்" எனத் தேவாரத்தும்,

"அடியார்க்கெளியன்சிற்றம்பலவன்கொற்றங்
குடியார்க்கெழுதிபகைச்சீட்டுப்-படியின்மிசைப்
பெத்தான்சாம்பானையின்றுபேதமறத்தீக்கைசெய்து
முத்தியிலேசேர்க்கைமுறை"

என நடராசமூர்த்தி கூறியருளிய வெண்பாவிலும், "அன்புக்கெளிய னருளால்" எனத் திருவிளையாடற் புராணத்திலும், பிறவற்றிலுங் கூறுதல் காண்க.

அன்பர் எதுசெய்யினுஞ் சிவபிரான் மகிழ்ந்தருள்வார் என்பதனை,

"அடையாளம்படவொருவனடித்தகொடுஞ்சிலைத்தழும்புந்
தொடையாகவொருதொண்டன்றொடுத்தெறிந்தகல்லும்போற்
கடையானேன்வெகுண்டடித்தகைப்பிரம்புமுலகமெலா
முடையானேபொறுத்ததோவுன்னருமைத்திருமேனி"

எனத் திருவிளையாடற்புராணத்திலும்,

"அடிகணேவச்சென் றுளென விறகுமண் சுமந்து
மடி பொறுத்துமோ ரரிவைதா றாற்றியும் வெள்கா
தடிய ரெண்ணமே முடிப்பது விரதமாக் கொண்ட
வடிகள் வாகையிக் கண்ணனுக் களித்தது வியப்போ"

எனக் காஞ்சிப்புராணத்திலும், "பத்திவலையிற்படுவோன்காண்க" எனத் திருவாசகத்திலும், பிறவற்றிலுங் கூறுதல் காண்க.

இனி, அன்பினையுஞ் சிவபிரானருளினையுஞ் சீர்தூக்கிநோக்கில், அன்பே மேலானது என்னுங் கருத்தமையச் சேக்கிழாநாயனார், அமர்நீதிநாயனார் புராணத்தில்,

"முட்டிலன்பர்தமன்பிடுந்தட்டுக்குமுதல்வர்
மட்டுநின்றதட்டருளொடுந்தாழ்வுறும்வழக்காற்
பட்டொடுந்துகிலநேககோடிகளிட்டபத்தர்
தட்டுமேற்படத்தாழ்ந்ததுகோவணத்தட்டு"

எனக் கூறியருளினர். அன்புக்கியல்பு மேன்மேலாதலும், அருளுக்கியல்பு தாழ்ந்து பதிதலுமுடைமையால் இங்ஙனங் கூறினரென்க. இன்னுஞ் "சத்திநிபாதத்தர்" என்பதிலே, சத்திநிபாதம் என்பதற்குச் சத்தி - அருள். பாதம் - பதிதல். நி - உபசருக்கம் என்பதனு மறிக.

உலகிலான்மாக்கள்செய்கின்ற நித்திய நைமித்திக காமியங்கட்குப் பயனுதவிக் கதியருளுமாறு மூர்த்தி தலந் தீர்த்தமாயுங் குருவாயுஞ் சங்கமமாயு மெழுந்தருளியிருப்பதனு லிவ்விடங்களிலே அன்பு

செய்யவேண்டும். "அரிலறுசித்தநைமித்திககாமியமாம்வினைக்குக்-கரிசறுமூர்த்திகலந்தீர்த்தமாயமர்காரணனே" எனஞர் பஞ்சாக்கரதேசிகமூர்த்தியந்தாதியிலும். இன்னுஞ் சிவஞானசித்தியாரில்,

"திருக்கோயி லுள்ளிருக்குந் திருமேனி தன்னைச்
சிவனெனவே கண்டவர்க்குச் சிவனுறைவ னங்கே
யுருக்கோலி மந்திரத்தா லெனநினையு மவர்க்கு
முளனெங்கு மிலனிங்கு முளனென் பார்க்கும்
விருப்பாய வடிவாகி யிந்தனத்தி னெரிபோன்
மந்திரத்தின் வந்துதித்து மிகுஞ்சுரபிக் கெங்கு
முருக்காண வொண்ணாத பான்முலைப்பால் விம்மி
யொழுகுவதுபோல்வெளிப்பட் டருளுவனன் பர்க்கே"

எனக் கூறுதல்காண்க.

சிவனெனவேகண்டவர்-பகுத்துணர்தலின்றிச் சிவலிங்க முதலிய திருமேனியே சிவமெனக்கண்டு வழிபடுஞ்சரியையாளர்; இவர்க்கு ஆண்டு வெளிப்படாதுநின் றருள்செய்வன் என்க. உருக்கோலிமந்திரத்தாலெனநினையுமவர்—அருவப்பொருளாகிய சிவன் ஈசானுதி மந்திரங்களாற் சிவலிங்கமுதலிய திருவுருக்கொண்டானெனக் கருதி மந்திரநியாசத்தால்வழிபடுங் கிரியையாளர்; உளனெங்குமிலனிங்குமுளனென்பார் யோகிகளுள்ளமெங்கு மில்லமாகவாழுகின்ற சிவன் இத்திருமேனியிலுமிருந்து பூசைகொண்டருள்வானெனக் கருதிச் சாத்திய மந்திரங்களால் வழிபடுயோகிகள்; என்க. கடைந்தவழி விறகிற்றோன்றுமெரியும், கறந்தவழித்தோன்றும் பாலும் போல அவ்வம் மந்திரங்களால் அவரவர் விரும்பியவடிவாய் அத்திருமேனியி லப்போதப்போது தோன்றிநின் றருள்செய்வனென்க. இதனை,

"விறகிற்றீயினன் பாலிற்படுநெய்போன்
மறையநின்றுளன் மாமணிச்சோதியா
னுறவுகோனட்டுணர்வுகயிற்றினுன்
முறுகவாங்கிக்கடையமுன்னிற்குமே"

எனத் தேவாரத்திலுங் கூறியிருத்தல் காண்க. அன்பர்க்கு—அவர் போலேகதேசமாய்க் குறித்தலின்றி அன்புமாத்திரையா னுண்டுவழி

படு ஞானிகட்கு என்க. மிருகண்டுமுனிவர்க்கு முருக்காணவோண் ணுதபான்பூலைப்பால்விம்மி யெ ழுகுவதுபோல் வெளிப்பட்டருளு வன்-கன்றைநினைந்த புனிற்றாவின்முலைபோலக் கருணைமிகுதியால் அவ்வன்பே தானுய் எப்போதும் ஆண்டுவெளிப்பட்டுநின் றருள்செய் வன்; ஆதலா லலைதறிந்து வழிபடுக; என்ப தெச்சம். இதனாற் சிவலிங்கமுதலிய திருமேனிகளெல்லாஞ் சரியைமுதலிய நான்குவகை யாளர்க்கும் வழிபடுமிடமாயிற் றென்க.

இனி உண்டுடுத்திவாழுமியல்பிற் கேயுழைப்போர்க்கு எவ்வா றன்புசெய்யமுடியுமென்றால், " கள்ளக்காதலனிடத்தன்பு கலந்து வைத்தொழுகு, மூள்ளக்காரிகை" என வொழுகியிருந்த வாதவூ ரடிகள்போல அவ்வுழைப்போர் அகத்திலென்று மறவாதிருத்தல் வேண்டுமென்க.

இவ்வன்பை இருவகையாகக் காஞ்சிப்புராணத்தில்,

"தத்துவெண்டிரைவேலைஞ்சமடற்றடக்கியதபபிரான்
பத்திமார்க்கமிரண்டுகூறதுபற்றறுத்துயரக்தனீர்
புத்திநல்குவதொன்றிரண்டறுபூரணப்பொருளோடுலா
முத்திநல்குவதொன்றிரண்டனுண்முன்னியபமியபத்திதான்"

(புத்தி-போகம்.)

"சார்புபற்றியுதிக்குமற்றைபதொன்றுசத்திபதிந்தமெய்ச்
சார்பினெய்துமிரண்டுமுத்திதழைக்குமாயினும்வெவ்வினைச்
சார்பினோர்பெறுசார்புபற்றியபத்திதானிடைவிள்ளுமச்
சார்பிலாதெழுமுண்மையன்புதனைப்புருதெவர்கட்குமே"

(சத்திபதிதல்-அருள்பதிதல்.)

"செய்த செய்வன வாய தீவினை யாவு மிச்சிவ பத்தர்பா
லெய்தி டாகம லத்தி லைக்கம லத்தி னென்றறி மின்களோ
வைது காமம் விழைந்த பத்தியு நல்ல றத்துறை யார்பெறி
னீத ராதிது பத்தி பேத முணர்ந்து ளோர்நவில் கிற்பதே"
எனக் கூறியிருக்கின்றார்.

இவ்வுண்மையன்பையுடையவராய்ச் சிவகதியடைந்த நாயன்மா ரனவிலாருனர்; அவருள்ளே கண்ணப்பநாயனுரையும் வாதவூரடி

களையும்பற்றி யிங்கே பேசத்தொடங்கினேன்; இவ் வாதவூரடிகளன் பினைக்கூறுங்கால், இவர் திருவாசக பாடலைப்போதினர் கருங்கன் மனமுடையரேனும் அம்மன முடைந்துருகி யன்பராகுவார்; இவ் வாறு நால்வர்நான்மணிமாலையில்,

"விளங்கிழைபகிர்ந்தமெய்யுடைமுக்கட்
காரணனுரையெனுமாரணமொழியோ
வாதிசீர்பரவும்வாதவூரண்ணன்
மலர்வாய்ப்பிறந்தவாசகத்தேனே
யாதோசிறந்ததென்குவீராயின்
வேதமோதின்விழிநீர்பெருக்கி
நெஞ்சநெக்குருகிநிற்பவர்க்காண்கிலந்
திருவாசகமிங்கொருகாலோதிற்
கருங்கன்மனமுங்கரைந்துகக்கண்க
டொடுமணற்கேணியிற்சுரந்துநீர்பாய
மெய்ம்மயிர்பொடிப்பவிதிர்விதிர்ப்பெய்தி
யன்பராகுநரன்றி
மன்பதையுலகின்மற்றையரிலரே"

என்னு மகவலிற் கூறியிருக்கின்றார். இவரன்பிற்சிறந்தபாடலைக் கேட்டுவக்கும்பொருட்டுச்சிவபிரானும் மிகவரியபணிகளைச் செய்திருக்கின்றார்; ஏனைய வடியாரெல்லா மன்பி லரியபணிகளைச்செய்து சிவபிரானருளை யடைந்திருக்கின்றார்கள்; இக்கருத்தமைய அந் நால்வர்நான்மணிமாலையில்,

"கடனிறவண்ணன்கண்ணொன்றிடந்து
மறைச்சிலம்பார்த்துமலரடிக்கணியப்
பரிதிகொடுத்தசுருதிநாயகற்கு
முடிவிளக்கெரித்துங்கடிமலர்க்கோதைச்
சுரிகுழற்கருங்கட்டுணைவியையளித்து
மருமகனூம்பூங்கருமயிருதவியு
நென்முளைவாரியின்னமுதருத்தியுங்
கோவணநேர்தனைநிறுத்துக்கொடுத்து
மதப்படுமணிமீனாற்கெனவிடுத்தும்

பூட்டியரிவாளூட்டிபரிந்துந்
தலையுடையொலிக்குஞ்சிலையிடைமோகியு
மொய்ம்மலர்க்கோதைகைம்மலர்துணித்துந்
தந்தையைத்தடிந்துமைந்தனைக்கொன்றுங்
குற்றஞ்செய்தசுற்றங்களைந்தும்
பூங்கொளுமாதர்மூக்கினையரிந்து
மிளமுலைமாதர்வளமைதுறந்தும்
பண்டைநாளொருசிலர்தொண்டராயினர்
செங்கண்மாறடக்கையிற்சங்கநாண
முட்டாட்டாமரைமுறுக்கவிழ்மலர்மேல்
வலம்புரிகிடக்கும்வாதலூரன்ப
பாடும்பணிகூடும்பொருட்டு
மதுரைமாநகரிற்குதிரைமாறியும்
விண்புகழ்முடிமிசைமண்பொறைசுமந்து
நீற்றெழின்மேனியின்மாற்றடிபட்டு
நின்னைதொண்டனென்னைக்கொண்டனை
னிருக்குமுடிக்கலரக்கனெடுப்ப
முலைபொரவரைபொருமொய்ம்பின்
மலைமகடழுவமனமகிழ்வோனே"

எனக் கூறியிருக்கின்றார். இவரது அரியபெரியவன்பிற் சிறிதுவேண்டு மென்று இவரை வேண்டுகின்றதாக, அந்நூலில்,

"வேண்டுநின்னடியார்மெய்யன்பெனக்கு
மருள்செய்சிவனேயலக்தேனந்தோ
முறையோமுறையோவிறையோனேயென்
றழுதுசெம்பொனம்பலக்கூத்த
னருளாற்பெற்றவன்பினிலொருசிறி
தடியனேற்குமருளல்வேண்டு
மீயேகோடனின்னருட்பெருக்கிற்
கேற்றதன்றிளவேறுகக்தேறியைப்
பரிமாமிசைவரப்பண்ணியவித்தக

திருந்தியவேதசிரப்பொருண்முழுதும்
பெருந்துறையிடத்துப்பெருஞ்சீர்க்
குருந்துறுநீழலிற்கொள்ளைகொள்வோயே"

எனக் கூறியிருக்கின்றார். திருவிளையாடலில்,

"எழுதருமறைகடேறாவிறைவனையெல்லிற்கங்குற்
பொழுதறுகாலத்தென்றும்பூசனைவிடாதுசெய்து
தொழுதகைதலைமேலேறத்துளும்புகண்ணீருண்மூழ்கி
யழுதடியடைந்தவன்பனடியவர்க்கன்புசெய்வாம்"

எனவே கூறினர். இவர் பாண்டியனுக்கு மந்திரியாயிருக்குங் காலத்தில், "பத்திசெய்தரனருட்பெறும்பத்தருக்கன்றி, முத்தியெய்தரிது" என்றுட்கொண்டு, அதற்குரிய ஞானசாரியனெப்பொழுது வருவான் என்று நீர்விடாயுற்றவன் நீரைத்தேடுவதுபோலத் தேடியிருந்தார்; பின்னர் அரசன்பொருட்டுப் பரிவாங்கச்சென்றவர் பெருந்துறையடைந்து சிவபிரான் குருவடிவாகிக் குருந்தடியிலெழுந்தருளியிருக்கக்கண்டு தெரிசித் துபதேசம்பெற்று,

"பார்த்த பார்வையா லிரும்புண்ட நீரெனப் பருகுந்
தீர்த்தன் றன்னையுங் குருமொழி செய்த்துந் தம்மைப்
போர்த்த பாசமுந் தம்மையு மறந்துமெய்ப் போத
மூர்த்தி யாயொன்று மறிந்திலர் வாதவூர் முனிவர்"

என்றபடியிருந்து பின்பு குதிரைவரவில்லையேயெனக் கண்டித்த சுற்றத்தார் முதலானவரை நோக்கி,

"சுற்றமுந்தொடர்புநீத்தேன்றுன்பமுமின்புமற்றேன்
வெற்றுடன்மானந்தீர்ந்தேன்வெறுக்கைமேல்வெறுக்கைவைத்தேன்
செற்றமுஞ்செருக்குங்காய்ந்தேனிருவினையிரண்டுந்தீர்ந்தேன்
கற்றைவார்சடையான்கோலங்காட்டியாட்கொண்டவன்றே"

"தந்தைதாய்குரவனுசான் றங்கைதனிராசைபெண்டிர்
மைந்தர்பல்லுயிருஞ்சுற்றபாசிலாவீசனன்ப
ரந்தமில்பிறவியேழுபடுபகையென்பதோர்ந்தே
னெந்தையார்கருணைகாட்டியெம்மையாட்கொண்டவன்றே"

"ஊரெல்லாமட்டசோறுநம்பதேயுவரிசூழ்ந்த
பாரெலாம்பாயமுன்னற்கோவணைபரிக்குமாடை
சீரெலாஞ்சிறந்தசாந்தஞ்செய்வரீறணிபூண்கண்டி
நீரெலாம்பொலிந்தநீவணிதிருந்ததனுட்கொண்டவன்றே"

எனவுங்கூறினர். பின்பு தம்மைத் தண்டஞ்செய்த அரசனடிபணிந்து பொறுத்தருளவேண்டினபோது,

"உம்மையா னடுத்த நீரா லுலகியல் வேத நீதி
செம்மையா லிரண்டு நன்றாய்த் தெளிந்தது தெளிந்த நீரான்
மெய்ம்மையாஞ் சித்த சுத்தி விளைந்தது விளைந்த நீராற்
பொய்ம்மைவா னவரி னீங்கிப் போந்தது சிவன்பாற் பத்தி"

"வந்தவிப் பத்தியாலே மாயையின் விருத்தி யான
பந்தமாம் பவஞ்ச வாழ்க்கை விளைவினுட் பட்ட துன்பம்
வெந்தது சருணை யாகி மெய்யுணர் வின்பந் தன்னைத்
தந்தது பாதஞ் சூட்டித் தன்மய மாக்கிற் றன்றே"

எனவுங் கூறினர். இவர் இவ்வாறு பத்திசெய்து குருவருள்பெற்று முத்திநிலையடைந்தவராதலாலே, கண்ணப்பநாயனர் காளத்திநாதரைக் கண்டவுடன் பூர்வவாசனைத்தொடர்பு மேலெழ,

"திங்கள்சேர் சடையார் தம்மைச் சென்றவர் காணு முன்ன
மங்கணர் கருணை கூர்ந்த வருட்டிரு நோக்க மெய்தத்
தங்கிய பவத்தின் முன்னைச் சார்புவிட் டகல நீங்கிப்
பொங்கிய வொளியி னீழற் பொருவிலன் புருவ மானார்"

"மாகமார்திருக்காளத்திமலையெழுகொழுந்தாயுள்ள
ஏகநாயகரைக்கண்டாரெழுந்தபேருவகையன்பின்
வேகமானதுமேற்செல்லமிக்கதோர்விரைவினோடு
மோகமாயோடிச்சென்றுதழுவினர்மோந்துநின்றார்"

என்றபடி பிரானும் பற்றின்றி யன்புவடிவாய்நின்று பின்,

"சார்வருந் தவங்கள் செய்து முனிவரு மமரர் தாமுங்
கார்வரை யடவி சேர்ந்துங் காணுதற் கரியார் தம்மை
யார்வமுன் பெருக வாரா வன்பினிற் கண்டு கொண்டே
நேர்பெற நோக்கி நின்றார் நீளிரு ணீங்க நின்றார்"

என்றபடியு நின்று ஆறுநாட் பூசைசெய்யச் சிவபிரான் அவரது வாய்நீரைத் திருமஞ்சனமாகவும், அவர் தலையிற்சூடிய பூக்களைத்திருப் பள்ளித்தாமமாகவும், அவர் மென்று ருசிபார்த்துவைத்து நிவேதித்த வூனைத் திருவமுதாகவுங்கொண்டு திருவுளமகிழ்ந்து இவரது அன் பினைச் சிவகோசரியார்க்கு வெளிப்படுத்தக் கண்ணிடந்து தங்கண்ணி லப்புமாறுசெய்தருளிக் கதிகொடுத்தமையறிந்து இவ்வா றன்பு தாம் புரியவில்லையென்பது விளங்கவும், சிவபிரான் பெருங்கருணைத்திறம் விளங்கவும்,

"கண்ணப்பனொப்பதோ ரன்பின்மைகண்டபி
னென்னப்பனென்னொப்பிலென்னையுமாட்கொண்டருளி"

என வெடுத்துரைத்தார்.

இவர் இங்ஙனமெடுத்துரைத்தாரெனில், அக் கண்ணப்பநாயனா ரன்பின்மகிமையை நானெவ்வாறெடுத்துரைப்பேன். இவர்களும் ஏனைய நாயன்மார்களுமன்றிக் குரங்கு பாம்பு யானை சிலந்தி எறும்பு முதலிய அஃறிணைகளுஞ் சிவபிரானை யன்பினால் வழிபட்டுக் கதி யடைந்தசரித்திரமுங் கேட்டிருக்கின்றோம்; ஆதலால், தன்னையன்பி னால் வழிபட்டுய்யுமாறு இம்மானிடவடிவத்தைக் கொடுத்தருளிய சிவபிரானை அன்பினா லியன்றவாறு வழிபாடுசெய்வது நம்முடைய கடமையென்று அறிவுடையோர் கொள்ளவேண்டும். இங்ஙனமே தேவாரத்தில்,

"வாழ்த்தவாயுநினைக்கமடநெஞ்சுந
தாழ்த்தச்சென்னியுந்தந்ததலைவனைச்
சூழ்ந்தபூமலரிட்டுத்துதியாதே
வீழ்த்தவாவினையேனெடுங்காலமே"

என்று கூறியருளினார். இன்னும் விரிக்கிற் பெருகுமாதலிற் சங்கிரக மாகத் தெரிந்தவரை கூறியதைப் பெரியோ ரங்கீகரிக்கவேண்டு கின்றேன்.

இங்ஙனம்,

திருவாவடுதுறையாதீனவித்துவானும்,

மதுரைத்தமிழ்ச்சங்கத்துச் சைவநூற்பரிசோதகருமான;

சே. ரா. சுப்பிரமணியக்கவிராயர்.

---

# மதிப்புரை.

I. ஹரிணி:—இது, வடமொழியில் காளிதாசமகாகவியாற் செய்யப்பட்ட இரகுவம்சத்துவரும் அஜன்கதையை ஆதாரமாகக்கொண்டு திரிசிரபுரம் ஸ்ரீமத்-அ. கு. மதனகோபாலதீக்ஷிதரவர்களால் இயற்றப்பட்ட ஒரு தமிழ்நாடகம். இதில் இடையிடையே பாத்திரங்களின் தகுதிக்கேற்பப் பாட்டுக்களும், இறுதியில் பாட்டுக்களுக்கு விசேடவுரையும், அரும்பதவிளக்கமும் சேர்க்கப்பட்டுள்ளன. இதன் விலை ரூபா ஒன்று. வேண்டுவோர் ஆக்கியோர்க்கெழுதிப் பெறலாம்.

II. தமிழபிமானி:—இப்பெயர்கொண்ட மாதாந்தப்பத்திரிகையின் முதற்பகுதி நமது பார்வைக்கு வந்தது. இது, அம்பாசமுத்திரத்திலிருந்து ஸ்ரீமத். வாசுதேவராவ்கேய்க்வாட் அவர்களை ஆசிரியராகக்கொண்டு வெளிவருவது. இதன் முதற்பகுதியில், கடவுள், கல்வி, தமிழ்ச்சிறப்பு, சிவஞானயோகிகள் சரித்திரம், காலபேதங்களின் உண்மை முதலிய பதினாறுவிஷயங்கள் தக்கவர்களால் நன்னடையில் எழுதி வெளியிடப்பட்டுள்ளன. சிறிய எழுத்தில் திருத்தமுற அச்சிடப்பட்டுள்ளது. நாளிது ரௌத்திரிஸு தைமீ தொடங்கி நடைபெறுவது. இதன் வருடச்சந்தா ரூபா இரண்டு. தனிப்பிரதி ரூபா **0—4—0**. வேண்டுவோர் மானேஜர், தமிழபிமானி, அம்பாசமுத்திரம் **S. I. R.** என்ற விலாசத்துக்கு எழுதிப்பெறலாம்.

III. இந்திய விவசாயம்:—இது சென்னை அரமனைக்காரத்தெரு இந்திய விவசாயநிலயத்திலிருந்து கடந்த நவம்பர்மாதமுதல் மாதந்தோறும் வெளிவரும் ஒரு தமிழ்ப்பத்திரிகை. பயிர்டும்வகை, பிருதிவி இலக்கணம், தாவரசாத்திரம், மிருகபரிபாலனம், பயிர்களுக்குக் கெடுதியுண்டாக்கும் புழு, பூச்சி, நோய், இவைகளையறிந்து தடுக்கு

முறை, ரசாயனசாஸ்திரம், தேனீ, பட்டுப்பூச்சி, பறவை இவைகளை வளர்த்தல், கூட்டுறவுமுறை முதலியவற்றைத் தக்க அறிவாளர் எழுதும் உரைநடைகளாலும் சென்னை விளம்பரசபையார் வெளியிடும் அறிக்கைகளாலும் கிருஷிகர்களுக்குப் போதிப்பதே இதன் நோக்கமென்று தெரிகிறது. இதன் முதன்மலரில் இரண்டாம்இதழ் நமது பார்வைக்குக் கிடைத்தது. அதில் நெற்பயிர், கால்நடையின்கதி, பூமியிற் பொன் உளது என்ற விஷயங்கள் தக்கவர்களால் ஆராய்ச்சியுடன் எழுதி வெளியிடப்பட்டிருப்பதுடன், சென்னை விளம்பரசபையார் வெளியிட்ட தமிழ் ஜில்லாக்களில் உபயோகப்படக்கூடிய பசுந்தழை எருப்பயிர்கள், கிணறு வெட்டுவதற்கும் இதர விஷயங்களுக்கும் இராசாங்கத்தார் குடிகளுக்குக் கடன் கொடுத்து உதவிசெய்தல் என்ற விஷயங்கள் அநுபந்தமாகச் சேர்க்கப்பட்டும் உள்ளன. இது, கிருஷிகர்கள் வழங்கும் பழமொழிகளைக்காட்டி அவர்கள் அறிந்துகொள்ளவேண்டிய பல விஷயங்களைத் தெளிய விளக்குவதால் அவர்களுக்கு மிகவும் பயன்படத்தக்கதாயிருக்கிறது. இதன் வருடச்சந்தா தபாற்கூலியுள்பட சாதாரணப் பதிப்புக்கு ரூ **1—4—0**. உயர்தரப் பதிப்புக்கு ரூ **3—4—0**, வேண்டுவோர் "மானேஜர், இந்தியவிவசாயம் ஆபீஸ், **82** அரமனைக்காரத்தெரு, சென்னை" என்ற விலாசத்துக்கு எழுதிப்பெறலாம்.

பத்திராதிபர்.

---

## வாழ்க்கைப்பாட்டு.



ஆருயிர் வாழ்நா ளாம்வெறுங் கனவென
விடர்ப் படூஉச் செய்யுளி னெடுத்துரை யற்க
மற்றியா தென்னின் மடிவாந் துயிலும்
புறம்படு தோற்றம் பொருளியல் பன்றே.
மக்கள் வேண்டுவது வாழ்வு ளுண்மை
போமிட முயிர்க்குப் புறங்கா டன்று.
"நீயே யிறுதியி னிலம்புக்கு மண்ணாய்ப்
போகுதி" யென்று புகறருஞ் சொற்றொடர்
உடலக் கன்றி யுயிர்க்கா குங்கொல்?

இன்பமுந் துன்பமு மெம்மனோர்க் கிறைவ
னமைந்த முடிவுமோ ராறுமன் றம்மா:
மற்றியா தெனினே வாழ்தரு நான்மன்
னென்றின்மற் றென்றயர் வுறவொழு கற்கே.
காலங் கழிமே கற்பன கரையில,
வன்மையுந் துணிபும் வல்லாங்குப் பெறினு
மிகொட் டகம்புக லெய்துவோற் காணி
னெம்மனஞ் சாப்பறை பெஞ்சுறத் துடிக்கும்.
உலகெனும் போர்க்களத் துறுநிலை கல்லா
மாவெனப் படாஅது வாழ்க்கை தானே
நிலத்துவரை மான நின்றாற்று மறவனி
னருங்குணம் பெறுதி; யதாஅன்று வருநா
ளன்றே யாயினு நம்பா தொழிதி:
கழிந்த வாறே கழிந்தநாள் கழிக.
உள்ளு முளத்திற்கு முயர்நிலை யிறைக்கு
மேற்றவா றொருவினை யின்றுபுகுந் தியற்றுக.
பெரியோர் நடாத்திய பெட்புறாஉம் வாழ்க்கை
யன்னோர்க்கு நன்னிலை யாதலொடு நமர்க்கும்
காலமா மணன்மிசைக் காற்சுவ டிருத்திநம்
வாழ்வுமுற் றுதற்குநல் வழிசெயும்; அம்முறை
யமைத்த சுவடுமற் றடிதுயர் பெருகுபுன்
வாழ்வாம் வனத்திடை வழிதெரி யாது
மனநனி நொந்து வருந்தியழி பேதை
மாக்க டமக்கு மனவலி யூட்டும்.
ஆதலி னெழுமி னமர்ந்த வந்நிலையின்
யாதியாது வரினு மிளைப்புறு தாற்றுமின்.
முயற்சியோ டடக்க முட்டின்றிப் போற்றுமின்.
உயர்ச்சிதரு வாறை னுவப்புறு வீரென.

ஆர். ஆர். குணரத்நம் பி. ஏ.

---

வக்கிரன்றானேசெவ்வாயாகும் ௫
வகுப்பென்பதுவேகட்டழகாகும் ௬
வங்கூழென்பதுகாற்றெனலாகும் ௭
வருடல்தானேதடவலாகும் ௮
வசையென்பதுவேகுற்றமாகும் ௯
வசையந்தானேமானேற்றின்பெயர் ௧௦
வஞ்சினயேசூளறவெனப்படுமே ௧௧
வட்புலியென்பதுசிங்கமாகும் ௧௨
வணரென்பதுவேவளைவெனலாகும் ௧௩
வண்டானந்தான்குருகினமாகும் ௧௪
வத்தமென்பதுசோறெனலாகும் ௧௫
வந்தனைதானேதொழுதலாகும் ௧௬
வம்பலென்பதுதிசையெனலாகும் ௧௭
வயவரிதானேபுலியெனலாகும் ௧௮
வலியானேயொருகுருவியாகும் ௧௯
வயினதேயனேகருடனாகும் ௨௦
வயிரென்பதுவேகருங்கொம்பாகும் ௨௧
வயிரியரென்பதுகூத்தராகும் ௨௨
வரிக்கடைதானேவண்டெனலாகும் ௨௩
வரியாடலென்றலெழுதலாகும் ௨௪
வரூதினியென்பதுபடையெனலாகும் ௨௫
வலித்தல்தானேநினைத்தலாகும் ௨௬
வயிரோசனனேமாவலியாகும் ௨௭
வல்லிசைதானேபாம்பெனலாகும் ௨௮
வல்லமென்பதுவேயில்லாளாகும் ௨௯
வல்லுநரென்பதுவல்லாராகும் ௩௦
வல்லார்தானேமாட்டாதாராம் ௩௧

வழிஞ்சிதானேயிளமையாகும் ௩௨
வழிநாளென்பதுபிற்றைநாளாம் ௩
வழியடைக்கல்லேபுறம்புறுத்தலாகும் ௩௪
வழிபயத்தலென்பதுமறுப்பறுத்தலாகும் ௩௫
வடமுகிலென்பதுபாண்டியனாகும் ௩௬
வழுதுணையென்பதுவழுதலையாகும் ௩௭
வமைச்சென்பதுவேயிளமையாகும் ௩௮
வழையென்பதுவேசுரபுன்னையாகும் ௩௯
வழாதென்றலேபேசாதெனலாம் ௪0
வளாகமென்பதுவேயிடமெனப்படுமே ௪௧
வளவனென்பதுசோழனாகும் ௪௨
வள்ளுத்தானேவாளுறையாகும் ௪௩
வளையந்தானேவட்டமாகும் ௪௪
வளையகமென்பதுசங்கெனலாகும் ௪௫
வற்காலிதானேவெள்ளாடாகும் ௪௬
வற்கலையென்பதுமாவுரியாகும் ௪௭
வள்ளியோரேவரையாதுகொடுப்போர் ௪௮
வள்ளியர்தானேபுகழ்வோராகும் ௪௯
வனப்பென்பதுவேயழகெனப்படுமே ௫0
வள்ளியமென்பதுமரக்கலப்பேர் ௫௧
வன்சிறைதானேமதிலெனப்படுமே ௫௨

வம்முதலொருபேர்முற்றும்.

வம்முதலிருபெயர்

வஞ்சமேபொய்வாளெனவிருபேர் ௫௩
வண்மையேசந்தனமுஞ்சாந்தும் ௫௪
வட்டணைதானேபறுத்தலுமொத்தலும் ௫௫
வண்டலேவிளையாட்டும்வண்டலும் ௫௬

வழுதலேதானேபுனத்திடுபொய்க்கழு
வழுதுணையெனவேவழங்குமிருபெயர் ருஎ
வம்பலரேபுதியோரயலோராம் ருஅ
வலவன்றானேவெற்றியாளனுந்
தேரிற்பாகனுஞ்செப்புமிருபேர் ருசு
வல்சியேசூழுணவோடிருபெயர் சு0
வல்லியமேபுலிகொடியெனவிருபேர் சுக
வழித்தோன்றலென்பதுமகனுமகளும் சுஉ
வழிபாடென்பதுபூசனையுடனே
வழிபாடெனவேமதிக்குமிருபேர் சுரு
வள்ளந்தானேயளவையும்வட்டிலும் சுச
வயிறேகயிறும்வயிறுமிருபேர் சுரு
வல்லிகைதானேகாதிலணியும்
யாழுமெனவேயறையுமிருபேர் சுசு
வள்ளியந்தானேயூதிடுங்குழலு
மிளகுமெனவேவிரிக்குமிருபேர் சுஎ
வயலேவெளியும்பழனமுமிருபேர் சுஅ
வட்கலேநாண்கேடெனவிருபேர் சுசு
வருடமேமழையாண்டெனவிருபேர் எ0
வலவைதானேவஞ்சப்பெண்ணும்
வல்லோனெனவுமருவுமிருபேர் எக
வடுகென்பதுவேமருதயாழ்த்திறனு
மிந்தளமெனவுமிசைக்குமிருபேர் எஉ
வருணமேநீர்குலமிருபோராம் எரு
வறிதேயருகலுஞ்சிறிதுமிருபெயர் எச
வரிதல்தானேயெழுதலும்வரிதலும் எரு
வள்ளைதானேயோர்பாட்டுடனே
வள்ளையுமெனவேமருவுமிருபேர் எசு

வம்முதலிருபேர்முற்றும்.

## வம்முதன்முப்பெயர்

வகரதலென்பதுகொள்ளலுரைக்கலு
மெழுதலுமெனவேயிசைக்குமுப்பேர் எஎ

வளமையேமாட்சிமையுங்கொழுப்பு
முபசாரமுமெனவோதுமுப்பெயரே எஅ

வில்லையென்பதுவலியுங்காடும்
விரைவுமெனவேவிளம்புமுப்பேர் எகூ

வடமென்பதுவேயாலுங்காணியும்
வட்டமுமெனவேமதிக்குமுப்பேர் அ0

வழங்கலேயுலாவுதலுஞ்சொல்லுங்
கொடையுமெனவேகூறுமுப்பேர் அக

வந்திகையேதுதலணியுஞ்சுணங்கும்
பூணுமெனவேபுகலுமுப்பேர் அஉ

வச்சிரமென்பதுவயிரமுங்குலிசமுஞ்
சதுரக்கள்ளியுஞ்சாற்றுமுப்பேர் அ௩

வயவனேவல்லாளனும்வலியனுங்
காதலனெனவுங்கருதுமுப்பேர் அச

வயந்தனேயோர்வானரங்காமன்
றென்றலுடனேசெப்புமுப்பேர் அரு

வலம்புரியென்பதுநந்தியாவட்டமும்
வலம்புரியுடனுஞ்சங்குமுப்பேர் அசா

வயாவென்பதுவேகாதற்பெருக்கமுங்
கருப்பமுநோயுங்காட்டுமுப்பேர் அஎ

வயினென்பதுவேயிடமுமனையும்
வயிறுமெனவேமதிக்குமுப்பேர் அஅ

வரம்பென்பதுவேவட்டியுமணையும்
வரம்புமெனவேமருவுமுப்பேர் அகூ

வடகமென்பதுவேயத்தவாளமும்
வடகமுந்தோலும்வழங்குமுப்பேர் கூ0

வடவையென்பதுகோளிகைக்குதிரையும்
பிடியானையுங்கடையனலுமுப்பேர் ௯௧

வழியென்பதுவேயிடமுநடவையும்
பின்னுமெனவேபேசுமுப்பேர் ௯௨

வடிவமென்பதுமேனியுநிறமு
மெய்ச்சொல்லெனவும்விரிக்குமுப்பெயரே ௯௩

வம்முதன்முப்பேர்முற்றும்.

வம்முதனாற்பெயர்

வடுவேசெம்பும்வண்டுந்தழும்புங்
கூர்மையுமெனவேகூறுநாற்பேர் ௯௪

வட்டியென்பதுபுட்டிலும்வழியுங்
கூடையும்வட்டிலுங்கூறுநாற்பேர் ௯௫

வதுவையேகல்யாணமுநாற்றமும்
புணர்வும்வாசமும்போற்றுநாற்பெயரே ௯௬

வம்பேபுதுமையுங்கச்சும்மணமு
நிலையின்மையுமெனநிகழ்த்துநாற்பெயரே ௯௭

வல்லியேயாப்பாடியும்வள்ளியும்
வரைவும்நிகளமுமருவுநாற்பேர் ௯௮

வல்லேசூதும்வலியும்விரைவுங்
கச்சுமெனவேகருதுநாற்பெயரே ௯௯

வள்ளியேகைவளையுங்கூத்தும்
வல்லியும்புனையிழையுடனுநாற்பேர் ௧௦௦

வளமென்பதுவேபண்டமும்வனப்பும்
பலவகையும்வளப்பாடுநாற்பேர் ௧௦௧

வக்கிரமென்பதுமடங்கலுங்கொடுமையும்
போக்கும்வட்டமும்புகலுநாற்பேர் ௧௦௨

வன்னியேயோர்மரமுங்கிளியும்
பிரமசாரியுந்தீயுநாற்பெயர் ௧௦௩

வசுவே தவரும்பொன் ஹுந்தியுஞ்
சோதனமெனவுங்கூறுநாற்பேர் ௧0௪

வம்முதனாற்பேர்முற்றும்.

வம்முதலைம்பெயர்

வரையேமட்டும்வரையுமூங்கிலுங்
கையினில்வரையும்நீர்க்கரையுமைம்பேர் ௧0௫

வங்கமென்பதுவேவழுதலையியம்
வெள்ளிநாவாய்கருத்தெனவைந்தே ௧0௬

வண்ணந்தானேயொப்பனைசெயலு
மழகுஞ்சந்தமுங்கவியினோசையும்
பண்புமெனவேபகருமைம்பேர் ௧0௭

வண்டேசங்குங்குற்றமும்வளையும்
வண்டும்வாளியுமைம்பேராகும் ௧0௮

வஞ்சியேமேற்செலவுமோர்*பாவும்
வல்லியும்பெண்ணுங்கருவூருமைம்பேர் ௧௧௬

வலமேயிடமும்வெற்றியுங்கனமும்
வலமுமேனுமருவுமைம்பெயரே ௧௧0

வண்மையென்பதுவாய்மையுங்கொடையும்
வலியும்புகழும்வளனுமைம்பேர் ௧௧௧

வம்முதலைம்பேர்முற்றும்.

வம்முதலறுபெயர்

வயமேயாடுங்குதிரையுமிரும்பும்
வலியும்புட்பொதுநீருமறுபெயர் ௧௧௨

வயிரமேமணிவச்சிரங்கூர்மை
செற்றஞ்சேகுவன்மையறுபெயர் ௧௧௩

வம்முதலறுபேர்முற்றும்.

வம்முதலெழுபெயர்

வட்டமேயூர்கோளும்பரிசையும்
வலயமுந்துகிர்ச்சாலுந்தாழ்வுங்
கைம்மணியெனவுங்கருதுமேழ்பேர் ௧௧௪

* மாமும் என்பது பி-ம்.

வள்ளென்பதுவேகாதுங்கூர்மையும்
வலியும்வாளும்வாருஞ்செறிவும்
வளமுமெனவேவழங்குமேழ்பேர் கக௫

வசியென்பதுவேபோழ்ந்துவடுப்படுதலுங்
கூர்மையும்வசியமும்வாளுந்திரட்சியும்
வருட்டலுங்குற்றமுமேழ்பெயராகும் கக௬

வம்முதலேழ்பேர்முற்றும்.

வம்முதலெண்பெயர்

வனமேநீருஞ்சோலையுமீமமுந்
துழாயுநாடுங்காடும்வனப்பும்
புற்றுமெனவேபுகலுமெண்பேர் கக௭

வம்முதலெண்பேர்முற்றும்.

வம்முதற்பத்துப்பெயர்

வரியேசுணங்குமெழுத்துமொழுக்கும்
பாட்டுநீளமுமிறையுநெல்லும்
வடிவுந்தீயுங்கடலுமீரைம்பெயர் கக௮

வம்முதற்பத்துப்பேர்முற்றும்.

வம்முதற்பலபெயர்ச்சூத்திரமுற்றும்.

ஆகச்சூத்திரம்—கக௮.

வாமுதற்பலபெயர்ச்சூத்திரம்

வாமுதலொருபெயர்

வாசவனென்பதுதேவேந்திரன்பெயர் க
வாணிகர்தானேசெட்டிகளாகும் ௨
வாடாவள்ளியென்பதுசித்திரம் ௩
வாயிலோரேதமிழ்க்கூத்தாடிகள் ௪
வாய்மையென்பதுமெய்ம்மையாகும் ௫
வாய்த்தருனேபெறுதலாகும் ௬
வார்ப்பென்பதுவேவலையெனலாகும் ௭

வாரகந்தான்கடலெனப்படுமே அ
வாப்புதலென்பதுநற்கோலாகும் கூ
வார்தருமேனயொழுகலாகும் க0
வார்த்தைத்தொழிலோரேவேளாளர் கக
வாலதிதானேவாலுறுப்பாகும் கஉ
வாலிதென்பதுவலியெனலாகும் கரு
வாலுவர்தானேமடையாகும் கச
வாலுகமென்பதுவெண்மணலாகும் கரு
வானவரம்பனேசேரனாகும் கசு
வாலுங்கியென்பதுகக்கரியாகும் கஎ
வானேறேயிடியேறெனப்படும் கஅ
வாலாமையென்பதுசூதகமாகும் ககூ

வாமுதலொருபேர்முற்றும்.

வாமுதலிருபெயர்

வாதுவர்தானேயானைப்பாகர்
பரிமாவடிப்போரெனவிருபெயரே உ0
வானவனென்பதுபிரமனுஞ்சேரனும் உக
வாடையென்பதுவடகாற்றுடனே
வீதியுமெனவேவிளங்குமிருபெயர் உஉ
வாருணமேகடல்மேற்கெனவிருபேர் உரு
வாழியேயிடைச்சொல்வாழ்கெனலாகும் உச
வாமனமென்பதுதிக்கயத்தொன்றுங்
குறளுமெனவுங்கூறுமிருபேர் உரு
வாகையமருந்தொன்றுமிருபேர் உசு

வாமுதலிருபேர்முற்றும்.

வாமுதன்முப்பெயர்

வாக்கருமேனபழைத்தலுங்கொள்ளலும்
வார்த்தலுமெனவேவழங்குமுப்பேர் உஎ

வாணியேயோர்கூத்தும்வாக்கு
நாமகளெனவுநாட்டுமுப்பேர் உஅ

வானமேயாகாயமுமழையு
முலர்ந்தமரமுமெனுமுப்பேரே உசு

வாதந்தானேதருக்கமுங்காற்றும்
வாதமுமெனவேமருவுமுப்பேர் ௩0

வானியேமேற்கட்டியுஞ்சேனையுந்
துகிற்கொடியெனவுஞ்சொல்லுமுப்பேர் ௩க

வாய்தருனேயசையுநுணுக்கமும்
வாய்தலுமெனவேவழங்குமுப்பேர் ௩உ

வாளியேகணையுஞ்சோனைவாளியுஞ்
சுற்ரேட்டமுமெனச்சொல்லுமுப்பேர் ௩௩

வாவலென்பதுநசையுங்கடத்தலுந்
துருஞ்சிலுமெனவேசொல்லுமுப்பேர் ௩௪

வாமுதன்முப்பேர்முற்றும்.

வாமுதனாற்பெயர்

வாமமேயிடப்பாலுந்தொடையுங்
குறளும்வனப்புங்கூறுநாற்பேர் ௩௫

வாசமேயிருப்பிடமும்புடவையும்
புள்ளினிறகும்பூமணமுநாற்பேர் ௩௬

வாலேவெண்மையுமிகுதியுமிளமையும்
வாலுமெனவேமருவுநாற்பேர் ௩எ

வாயிலென்பதுபுலனுங்கடையுந்
தூதுந்திறனுஞ்சொல்லுநாற்பேர் ௩அ

வாமுதனாற்பேர்முற்றும்.

வாமுதலைம்பெயர்

வாரேநெடுமையுங்கச்சும்புயலு
நீருநேர்மையுமாகுமைம்பேர் ௩௬

வாளேயொளியுங்கச்சுங்கஙிறும்
வாளுநேருமருவுமைம்பேர் ௪0

வானேபெருமையுமழையும்புயலும்
விண்ணுமமுதமுமேவுமைம்பேர் ௪க

வாமுதலைம்பேர்முற்றும்.

வாமுதலறுபெயர்

வாயேயிடமும்வாய்மையுங்குழலும்
வாக்கும்வாயும்வருவாயுமறுபேர் ௪௨
வாரமேநேர்க்கரையுமன்பு
மலைச்சாரலுஞ்செவ்வாரமுங்கடலு
மேழ்கிழமையுமெனவிசைக்குமறுபேர் ௪௩

வாமுதலறுபேர்முற்றும்.

வாமுதலெண்பெயர்

வாரணந்தானேயானையுங்கடலுங்
கோழியுஞ்சங்குந்தடையுங்கவசமும்
பன்றியுமுன்மத்தமுமெண்பெயரே ௪௪

வாமுதலெண்பேர்முற்றும்.

வாமுதற்பன்னிருபெயர்

வாகையென்பதுவேயறத்தின்றறையு
மொருமரமுடனேமிகுதிபெறுதலுங்
கைவலமுதலாங்கல்வியுமுண்மையு
மாள்வினைமுதலாஞ்செய்கையுநலமு
மொருவரிலொருவர்வென்றியுமொழுக்கமுந்
தவமுஞ்சால்புமுதலாம்பண்பு
மீகையுமெனவேபன்னிருபெயராம் ௪௫

வாமுதற்பன்னிருபேர்முற்றும்.

வாமுதற்பதின்முப்பெயர்

வாரிதானேமடையுங்கதவும்
வெள்ளமுநீருமதிலுங்கடலும்
பகுதியும்வாய்தலும்வழியுநாலும்
வருவாயுடனேயிடமுந்தகைப்பும்
பதின்முப்பேரும்பகரப்படுமே ௪௬

வாமுதற்பதின்முப்பேர்முற்றும்.

வாமுதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—௧௯௪.

## விம்முதற் பலபெயர்ச்சூத்திரம்.

### விம்முதலொருபெயர்

விகலமென்பதுசுருங்கலாகும் க
விகடந்தானேவேறுபாடாகும் உ
விகங்கமேபுட்பொதுப்பேராகும் ௩
விசாகனென்பதுமுருகனாகும் ௪
விசிகந்தானேயம்பெனலாகும் ௫
விசித்திரமென்பதுபேரழகாகும் ௬
விஞ்சையர்தானேவித்தியாதரர்பெயர் ௭
விதலையென்பதுநடுக்கமாகும் ௮
விதாதாவென்பதுபிரமன்பெயராம் ௯
விதிர்ப்புத்தானேநடுக்கமாகும் க0
விந்தையென்பதுதுர்க்கையாகும் கக
விபவந்தானேசெல்வமாகும் கஉ
விபஞ்சியென்பதுயாழெனப்படுமே க௩
விமலமேயழுக்கின்மையாகும் க௪
விப்பிரரென்பதுவேதியர்பேரே க௫
விம்மிதமேயதிசயமெனப்படுமே க௬
வியெனலேபுள்ளாமெனவிசைப்பர் க௭
விகலமேபாலிகையெனப்படுமே க௮
விலாளமென்பதுபூனையாகும் க௯
விரிஞ்சன்றானேபிரமனாகும் உ0
விரிச்சியென்பதுநற்சொல்லாகும் உக
விரிச்சிகைதானேயரைப்பட்டியாகும் உஉ
விருச்சிகமென்பதுதேளெனலாகும் உ௩
விருந்துதானேபுதுமையாகும் உ௪
விலங்காசென்பதுசிங்கமாகும் உ௫

வில்வந்தானே கூவிளமாகும் உசு
விளிந்தாரென்பது பிணமெனப்படுமே உஎ
விளையுள்தானே கழனியெனலாம் உஅ
விறலியென்பது பாணிச்சியின்பெயர் உகூ
விரதர்தானே மேலோராகும் ௩0
விழுக்குத்தானே நிணத்தின்பெயராம் ௩க
விருப்பமென்பது வேயாசையாகும் ௩உ

விற்முதலொருபேர்முற்றும்.

விற்முதலிருபெயர்

விதமேபுட்பொதுவிதமெனவிருபெயர் ௩௩
விடலைதிடலோன்றலைவனிருபெயர் ௩௪
வித்தகரேகண்ணாளருமிடையரும் ௩௫
விடபமென்பதுமரக்கொம்புடனே
யேறுமென்றேயிசைக்குமிருபெயர் ௩சு
விபுலந்தானே பெருமையும்விரிவும் ௩எ
வில்லேருழவரென்பதுவேந்தரும்
வேடருமெனவேவிதிக்குமிருபெயர் ௩அ
விறலேபெருமையும்வலியுமிருபெயர் ௩கூ
விழவேயுற்சவமிதனமிருபெயர் ௪0
விளவேகமரும்விளாவுமிருபெயர் ௪க
விம்மலேயேங்குதலுமொலித்தலும் ௪உ
விண்ணேமேகமும்விசும்புமிருபெயர் ௪௩
விரணமென்பது விழலும்விரணமும் ௪௪
விழைவேகாதலும்புணர்ச்சியுமிருபெயர் ௪௫
வியாளமேபுலியுரகமிருபெயர் ௪சு
விலோதமேபெண்மயிரும்பதாகையும் ௪எ
வியங்கோளென்பதுமேவலுங்கோளலும் ௪அ

விளக்குத்தானேவிளக்குநிலையு
மொளியுமெனவேயுரைக்குமிருபெயர் ௪௬

விம்முதலிருபேர்முற்றும்.

விம்முதன்முப்பெயர்

விலங்குதலேசெலவிடுதலுமெறிதலும்
விலங்குதலெனவுமேவுமுப்பெயரே ௫௦
விரைவேவேண்டலும்வெம்மையும்விரைவுமாம் ௫௧
விரோதமேயிருளும்வேறுபாடு
மயிருமெனவேமருவுமுப்பெயரே ௫௨
விசாலந்தானேயிடமுங்கடம்பும்
வாழையுமெனவேவைக்குமுப்பெயரே ௫௩
விடரென்பதுவேதூர்த்தரும்விப்புங்
காமுகரெனவுங்கருதுமுப்பெயரே ௫௪
விதப்பேமிகுதியுமதிலினுறுப்புங்
கம்பிதமெனவுங்காட்டுமுப்பெயரே ௫௫
விதவையேகைம்மணியுஞ்சோறுந்
திருவிலியெனவுஞ்செப்புமுப்பெயரே ௫௬
வியமென்பதுவேமழுவும்வில்லுங்
கொள்வனவெனவுங்கூறுமுப்பெயரே ௫௭
விழுமமென்பதுசிறப்புஞ்சீர்மையு
மிடும்பையுமெனவேயிசைக்குமுப்பெயரே ௫௮
விடிவென்பதுவேயச்சமும்வெளியு
நறும்புகையெனவுநாட்டுமுப்பெயரே ௫௯
விளரென்பதுவேயிளமையும்வெறுப்புங்
கொப்புமெனவேகூறுமுப்பெயரே ௬௦
விநாயகனென்பதுகணபதியருகன்
புத்தனெனவும்போற்றுமுப்பெயரே ௬௧
விலங்குமிருகமுங்காலிடுதளையுங்
குறுக்குமெனவேகூறுமுப்பெயரே ௬௨

விடையேயேறுமெதிர்மொழிகொடுத்தலு
மேகுதலுமெனவிசைக்குமுப்பெயரே ௬௩
விருத்திதானேவிரியவுரைத்தலு
முரிச்சொல்லுரிப்பொருளெனவுமூன்றே ௬௪

விம்முதன்முப்பேர்முற்றும்.

விம்முதனாற்பெயர்

விசையஞ்சருக்கரைவெற்றியக்காரம்
வெங்கதிர்மண்டிலம்விளம்புநாற்பெயரே ௬௫
விரையேமணமுஞ்சாந்துந்தூபமும்
வித்துமெனவேவிரிக்குநாற்பெயரே ௬௬
வில்லேயொளியுமூலநாளும்
வில்லுமூளியுபேவுநாற்பெயரே ௬௭
வியலேபெருமையுக்கலமுங்காடு
மரவட்டெனவுமருவுநாற்பெயரே ௬௮
விசும்பேமுகிலுந்துறக்கமும்விண்ணுங்
கருபமுமெனவேகருதுநாற்பெயரே ௬௯
விளரியேயிளமையும்வெட்கைமிகுதியும்
யாழிலோர்நரம்பும்பாழுநாற்பெயரே ௭௦

விம்முதனாற்பேர்முற்றும்.

விம்முதலைம்பெயர்

விடங்கமென்புறகொடுங்கையுமுகடு
மாண்மையுமழுந்துங்கொடியுமைம்பேரே ௭௧
விண்டேமாயனும்வெற்புமூங்கிலுங்
காற்றுமேகமுங்கருதுமைம்பெயரே ௭௨
விதியேயயனுங்குணமும்வினையு
மியல்புமூழுமெனுமைம்பெயரே ௭௩
விறப்பேபொருதலும்வெருவலும்வெற்றியும்
பெருக்கமுஞ்செறிவும்பேசுமைம்பேரே ௭௪

விபூதிதானேநீறுங்கொடுமையுந்
தசையுங்குற்றமுஞ்செல்வமுமைம்பெயர் ௭௫

விம்முதலைம்பேர்முற்றும்.

விம்முதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—௨௩௯.

வீமுதற்பலபெயர்ச்சூத்திரம்

வீமுதலொருபெயர்

வீதலென்பதுகெடுதலாகும் ௧
வீரட்டானமேகூத்தெனலாகும் ௨
வீரரென்பதுசூரராகும் ௩
வீமமென்பதுவேபயங்கரமாகும் ௪

வீமுதலொருபேர்முற்றும்.

வீமுதலிருபெயர்

வீசுதல்தானேவீசுதலுடனும்
விடுதலுமெனவேமேவுமிருபெயர் ௫
வீங்கலென்பதுவளர்தலும்வீங்கலும் ௬
வீதியென்பதுசெவ்வேபோகலுந்
தெருவுமென்றேசெப்புமிருபெயர் ௭

வீமுதலிருபேர்முற்றும்.

வீமுதன்முப்பெயர்

வீரையென்பதுகடலுந்துயரு
மொருமரமெனவுமுரைக்குமுப்பெயரே ௮

வீமுதன்முப்பேர்முற்றும்.

வீமுதனாற்பெயர்

வீயென்பதுவேநீக்கமுஞ்சாவும்
பூப்புள்ளெனவும்போற்றுநாற்பெயரே ௯
வீசலென்பதுவேயெறிதலுமீவும்
பாத்தலுமிகுதலும்பரவுநாற்பெயரே ௧௦

வீமுதனாற்பேர்முற்றும்.

வீமுதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—௨௪௯.

## வெம்முதற்பலபெயர்ச்சூத்திரம்.

### வெம்முதலொருபெயர்

வெஃகாமையென்பதுவேண்டாமையாகும் க
வெங்கோல்தானேகொடுங்கோலாகும் உ
வெண்களமரென்பதுவேளாளராகும் ௩
வெண்டேர்தானேபேய்த்தேராகும் ௪
வெண்பலியென்பதுசாம்பலாகும் ௫
வெண்கூதாளமேசீர்த்தாளியாகும் ௬
வெதிரந்தானேயிலந்தையாகும் ௭
வெரிநென்பதுவேமுதுகெனலாகும் ௮
வெருவந்தமென்பதுபயமெனலாகும் ௯
வெளிற்றுமரமேமுருக்கெனப்படுமே க0
வெறிப்புத்தானேசெறிவெனப்படுமே கக
வெற்றமென்பதுவீரமாகும் கஉ
வென்னென்றுரைப்பதுமுதுகெனலாகும் க௩
வெப்பமென்பதுவேனிலாகும் க௪

வெம்முதலொருபேர்முற்றும்.

### வெம்முதலிருபெயர்

வெள்ளிலேவிளாப்பாடையிருபெயர் க௫
வெண்கலமோனவெண்கலமிருபெயர் க௬
வெகுளியேயடங்காமையுங்கோபமும் க௭
வெண்மையென்பதுவேயறிவிலாமையும்
வெள்ளியுமெனவேமேவுமிருபெயர் க௮
வெய்யோனேவிரும்பிநோனுமிரவியும் க௯
வெறிரேவேயுஞ்செவிடுமிருபெயர் உ0

வெம்முதலிருபேர்முற்றும்.

வெம்முதன்முப்பெயர்

வெம்மையேயுட்டிணமும்விருப்பமுங்
கடுமையுமெனவேகருதுமுப்பெயர் உக

வெளிலேயணிலுமியனைத்தறியுந்
தயிாகடைதறியுமுப்பெயர்சாற்றும் உஉ

வென்றியென்பதுசெல்வமுந்துர்க்கையும்
வெற்றியுமெனவேவிரிக்குமுப்பெயரே உரு

வெள்ளமேயோரெண்ணுமிகுதியுங்
கடலுமெனவேகருதுமுப்பெயரே உச

வெம்முதன்முப்பேர்முற்றும்.

வெம்முதனாற்பெயர்

வெறுக்கையேவிழுப்பொருளுங்கனவும்
பொன்னுஞ்செல்வமும்போற்றுநாற்பெயரே உரு

வெடியேபுகையுமணமுமச்சமும்
வெள்ளிடையெனவுமவிரிக்குநாற்பெயரே உசு

வெம்முதனாற்பேர்முற்றும்.

வெம்முதலறுபெயர்

வெள்ளேயேவெளிறுமோர்பாவும்வெள்ளாடு
மிராமனும்வெள்ளியுஞ்சங்குமறுபெயர் உஎ

வெம்முதலறுபேர்முற்றும்.

வெம்முதலெண்பெயர்

வெறியென்பதுவேயாடும்வட்டமும்
பேயும்விரைவுநாற்றமுங்கலக்கமும்
வெருவுதலுடன்வெறியாடலுமெண்பெயர் உஅ

வெம்முதலெண்பேர்முற்றும்.

வெம்முதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—உஎஎ.

வேமுதற்பலபெயர்ச்சூத்திரம்

வேமுதலொருபெயர்

வேடகமென்பதுகாதுக்கணியாம் க

வேட்கோவர்தானேகுயவராகும் உ

வேரலென்பதுமூங்கிலாகும் ங

வேதாளந்தான்பேயெனலாகும் ச

வேளிரென்பதுகுறுநிலமன்னர் ரு
வேணகைதானேப றிலெனப்படுமே சா
வேதாளியரேபுகழ்வோர்பெயராம் எ
வேத்திரமென்பதுபிரம்பெனப்படுமே அ
வேதினந்தானேயீர்வாளாகும் கூ

வேமுதலொருபேர்முற்றும்.

## வேமுதலிருபெயர்

வேசரியேகோவேறுகழுதையுங்
கழுதையுமெனவேகாட்டுமிருபெயர் க0
வேதண்டமென்பதுவெள்ளிமலையும்
வெற்புமெனவேவிளங்குமிருபெயர் கக
வேதிகையென்பதுதிண்ணையும்பலகையும் கஉ
வேதமேயாழியமும்வேதமும் கங
வேட்டுவனேமகாரும்வேடனும் கச
வேய்தல்தானேமூடலுஞ்சூடலும் கரு
வேளேமதனுமுருகனுமிருபெயர் கசா
வேலனென்பதுவெறியாட்டாளனு
முருகனுமென்றேமொழியுமிருபெயர் கஎ
வேலாவலயமேகடலும்பூமியும் கஅ
வேரேவேர்வும்வேருமிருபெயர் ககூ
வேணியேமயிர்ச்சடைவிசும்பிருபேர் உ0

வேமுதலிருபேர்முற்றும்.

## வேமுதன்முப்பெயர்

வேலென்பதுவேயும்வாளும்
வில்லுமெனவேமேவுமுப்பெயரே உக
வேங்கையேயோர்மரமும்புலியும்
பொன்னுமென்றேபோற்றுமுப்பெயரே உஉ
வேகந்தானேயுடம்பும்வேகமுங்
ரூமெனவேளக்குமுப்பெயரே உங
வேலியென்பதுமதிலுங்காவலு
மூருமெனவேயுரைக்குமுப்பெயரே உச
வேளாண்மையேயுபகாரமுமெய்ம்மையுங்
கொடையுமெனவேகூறுமுப்பெயரே உரு

வேள்வியென்பதுவேள்விக்குண்டமுந்
தேவர்பூசையுங்கொடையுமுப்பெயரே உகூ

வேமுதன்முப்பேர்முற்றும்.

வேமுதனாற்பெயர்

வேலென்பதுகைவேலுமூங்கிலும்
வேணுமாயுதப்பொதுப்பெயரொடுநாலே உஎ

வேழமேகொறுக்கச்சியுமூங்கிலும்
யானையுங்கரும்புமிசைக்குநாற்பெயரே உஅ

வேயென்பதுவேவினையுமூங்கிலு
மொற்றுந்துளைவேய்தலுநாறபெயரே உகூ

வேலையேகடற்கரையுங்கடலுந்
தொழிலுமோர்காலமுஞ்சொல்லுநாற்பெயரே ௩0

வேமுதனாற்பேர்முற்றும்.

வேமுதலைம்பெயர்

வேந்தனேயிந்திரனும்வியாழமு
மன்னனுமதியும்பானுவுமைம்பெயர் ௩க

வேமுதலைம்பேர்முற்றும்.

வேமுதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—௩0அ.

வைம்முதற்பலபெயர்ச்சூத்திரம்

வைம்முதலொருபெயர்

வையகமென்பதுபூமியாகும் க

வைப்புத்தானேகைகாட்டாகும் உ

வைத்தியமென்பதுபரிகாரப்பெயர் ௩

வைகலந்தானேநாளெனப்படுமே ச

வைம்முதலொருபேர்முற்றும்.

வைம்முதலிருபெயர்

வைகறையாமமும்விடியலுமிருபெயர் ரு

வைம்முதலிருபேர்முற்றும்.

வைம்முதனாற்பெயர்

வையென்பதுவைக்கோலுங்கூர்மையும்
புல்லும்வையும்போற்றுநாற்பெயரே சா

வைகலேவைகறையுநாளுங்
கழியுநாளுந்தங்கலுநாற்பெயர் எ

வைமுதனாற்பேர்முற்றும்.

வைம்முதலெண்பெயர்

வையமேமானோமுரோகணியும்
பூமியுஞ்சிவிகையுஞ்சகடமுந்தேரு
மூர்தியும்விளக்குமோதுமெண்பெயரே அ

வைம்முதலெண்பேர்முற்றும்.

வைம்முதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—௩௧௬.

வௌமுதலொருபெயர்

வௌவலென்பதுபிடித்தலாகும் க

வௌவாலேனையோர்பறவைப்பெயர் உ

வௌமுதலொருபேர்முற்றும்.

ஆகச்சூத்திரம்—௩௧அ.

மேழித்துவசன்விளங்கியபுலியூர்
வாழ்நற்சிதம்பரரேவணசித்த
னிதியிற்றருமகராதிநிகண்டினிற்
பத்தாம்வகராதிப்பெயர்த்தொகுதி
யேத்துசூத்திரமுந்நூற்றெழுநான்கே

பத்தாவது

வகராதிப்பெயர்த்தொகுதிமுற்றும்.

ஆகத் தொகுதிபத்துக்குச் சூத்திரம்—௩௩௩௪.



ஸ்ரீ:

புலியூர்ச் சிதம்பரரேவணசித்தர் இயற்றிய

# அகராதிநிகண்டு.

இது

மதுரைத் தமிழ்ச்சங்கத்துச்

"செந்தமிழ்ப்" பத்திராதிபர்

திரு. நாராயணையங்காரால்

பரிசோதிக்கப்பெற்றது.




செந்தமிழ்ப் பிரசுரம்—௬௨.

மதுரைத்

தமிழ்ச்சங்கமுத்திராசாலைப்

பதிப்பு.

1921.

---



ஸ்ரீ:

# முகவுரை.

உலகவழக்கிலும் செய்யுள்வழக்கிலும் வழங்கப்பட்டுவரும் இயற்சொல்லும் திரிசொல்லுமாகிய சொற்றொகுதிகளுள் இன்னசொல் இன்னபொருளைபுணர்த்துவதெனத் தெரித்துணர்த்தும் நூல்களையெல்லாம் "நிகண்டு" என்னும் பெயரால் வழங்குவர். 'நிகண்டு' என்பது வடமொழியுள் வேதாங்கம் ஆறனுள் ஒன்றாகவே வைதிகோத்தமரால் மதிக்கப் பட்டிருக்கிறது. தமிழிலும், உரிச்சொல், பிங்கலம், திவாகரம், சூடாமணி, ஆசிரியம், கயாகரம் என்னும் பலநிகண்டுகளுள்ளனவாகக் காணப்படுகின்றன. அவை பெரும்பான்மை ஒருபொருட் பலபெயர்களையும், சிறுபான்மை ஒருசொற் பலபொருள்களையும் உணர்த்துவனவாம்.

அவற்றுள் இந்நூலுள் ஒருபொருட் பலபெயர்களையுணர்த்தாதொழித்து, ஒவ்வொன்றொருபொருளும், பலபொருளுமுணர்த்துஞ் சொற்களையே அகராதியாகத் தொகுத்துச் சூத்திரப்பாவாற் பொருளுரைக்கப்பட்டிருக்கிறது. இதன்கட் பிறநிகண்டிலுள்ள சொற்களும் பொருளும் பெரும்பாகம் காணப்படினும், அவற்றிலில்லாத சங்கமருவிய சான்றோர் செய்யுட்களிலும், அவற்றின் உரைகளிலும், பிற்காலத் தமிழ் நூல்களிலும் வழங்கப்பட்ட செந்தமிழ்ச்சொற்களும் உலகவழக்கிலுள்ள வெளிப்படைச்சொற்களும், தெலுங்கு, கன்னடம் முதலிய தமிழ்திரி பிறமொழித்திரிசொற்களும், ஆங்காங்குச் செந்தமிழ்நாட்டுள் வழங்கும் திசைச்சொற்களும், மருவியும் திரிந்தும் வழங்கும் வடசொற்களும் பிற சொற்களும் இடையிடையே மலிந்துகிடக்கின்றன.

இந்நூலைப்பற்றி, சென்னை இராசாங்கப் புத்தகசாலைப்பிரதிகளைக் கண்ணுற்ற ஸ்ரீமத். **M.** ரங்காசாரியரெழுதிவைத்திருக்கும் * அபிப்பிராயமும், சுன்னாகம் வித்வான் ஸ்ரீமத்-அ. குமாரசுவாமிப்பிள்ளையவர்கள் எழுதிய † அபிப்பிராயமும் கீழே காட்டப்பட்டுள்ளன.

இந்நூலில் ஒருபொருணுதலுமிடத்துக் கூறியசொற்களிற் சில பல பொருணுதலுமிடத்தும் படிக்கப்பட்டமையால் அவ்வொருபொருணுதலியசூத்திரங்க ளொழிக்கப்பட்டமையாலும், "பௌடிகந்தானே நிகழ் காலப்பெயர்" என்பது போலும் பிழைப்பொருளுரைத்த சூத்திரங்கள் விலக்கப்பட்டமையாலும் பிரதிபேதங்களில் அதிகபாடங்கள் காணப் பட்டமையாலும் சூத்திரத்தொகை ஏற்றத் தாழ்வுடையவாயின.

"போகில்" எனச் சூடாமணிநிகண்டில் நெடில் முதலாக வழங்கப் பட்டசொல் இந்நூலுட் 'பொகில்' எனக் குறின்முதலாக வழங்கப்பட்டிருக்கிறது. இன்னோரன்ன சிலவும், பிழையெனத் தெளியப்படாதனவும்

---

* "இந்நூல் சிறந்தநிகண்டுகளுள் ஒன்று. இதில் முதலெழுத்துக்கள்மட்டும் அகராதியாக அமைந்திருக்கின்றன. மற்றை யெழுத்துக்கள் அவ்வாறு அமையவில்லை. பிங்கலம், திவாகரம் முதலிய நிகண்டுகளுக்குப் பிற்பட்டது. புலியூர்ச் சிதம்பரரேவணசித்தர் இயற்றியது. இஃது "ரேவணாத்திரியார் சூத்திர" மெனவும் வழங்கும். இஃது இதுவரையில் அச்சிடப்பட்டதன்று"— (Page 4 of the Descriptive catalogue of the Tamil manuscripts in the Government oriental manuscripts Library, Madras.)

† "அகராதிநிகண்டும் அவசியம் வெளிப்படவேண்டியதே. படிப்போர் சொற்களின் பொருளையறிவதேயன்றிப் பழந்தமிழ்நூற் பரிபாலனமுமாகும். அதிலே "கச்சரி" "கம்பில்" "கலவகம்" முதலிய அருஞ்சொற்கள் வருகின்றன. சொற்களை அதிகந் திரிவாக்கிப்பாடினார்போலும். "விலாழி" என்பதன்றி "இலாழி" என்பது குதிரைவாய்நீர் என்கிறார். எங்கேயாவது பிரயோகமிருக்கலாம். வடமொழியிலே பலகறைக்குக் "கௌடி" என்று பெயர். இவர் "கவடி" என்பர். வேறுநூல்களிலுங் "கவடி" என்று வருகின்றது. அது "கவ்டி" என வருதல் நன்று. ஆயினும்முன்னோர்வழக்கு இருக்கட்டும். இக்காலத்திலே இவைகளைப்படிப்பார் அரியர்" (கடிதம்)

இருந்தபடியே பதிக்கப்பட்டன. சொற்களுக்குப் பொருளுரைக்கு முறையிலும் சிலபொருள் வேண்டாதனவும், சிலபொருள் விடப்பட்டன வும் உள.

இவற்றையெல்லாம் தமிழ்ப்புலமைமிக்கசான்றோர்கள் ஆராய்ந்து செப்பம்செய்து இன்னும் சேர்க்குமவற்றைச் சேர்த்து நூலைப்பூர்த்தி செய்துகொள்ளற் கிந்நூலாசிரியர் இடம்கொடுத்தாரென்றெண்ணும்படி இரண்டாமெழுத்துமுதலியவற்றையும் அகராதிமுறையாகச் சேரா திருப்பது பாராட்டத்தக்கது.

இந்நூலினிடையிடையேயுள்ள தற்சிறப்புப்பாயிரவாக்கியங்களால் இந்நூலாசிரியரூர் புலியூரென்றும், பெயர் சிதம்பரரேவணசித்தர் என்றும், இவர், திருப்பட்டீச்சுரப்புராணம், திருவலஞ்சுழிப்புராணம், திருமேற்றளிப்புராணம் முதலிய பிறநூல்களுமியற்றிய தமிழ்ப்புலமைசான்ற சைவவேளாளமரபினரென்றும், இற்றைக்கு முந்நூற்றிருபத்தைந்து வருடங்களுக்கு முன்பு இந்நூலை இயற்றினரென்றும் வெளியாகின்றன.

இந்நூலின் முதலிலுள்ள "தேனாருமகிழ்" என்ற பாசுரம் ஆழ்வார் திருநகரி ஏட்டில்மட்டு மிருப்பதால் அது அவ்வேடெழுதிய வைணவரா லெழுதிக்கொண்ட வழிபடுகடவுள்வாழ்த்தென்று தோன்றுகின்றது.

இந்நூலை அச்சிடத்தொடங்குங்கால் தமிழ்ச்சங்கக் கலாசாலைப்புதலியுபாத்தியாயர் நல்லசிவன்பிள்ளையும், பின்பு செந்தமி ழூதவிப்பத்திராதிபர் இராமாநுஜையங்காரும் ஏடுபார்த்தெழுதி ஒப்புநோக்கி உதவிபுரிந் திருப்பது பாராட்டத்தக்கது.

திரு. நாராயணையங்கார்,

செந்தமிழ்ப்பத்திராதிபர்.

## தமிழ்ப் புத்தகங்கள்.



**சீவகசிந்தாமணிவசனம்.**—இஃது பெரும் பஞ்சகாவியங்களுள் முதலாவதான சீவகசிந்தாமணியின் முதலிரண்டு இலம்பகங்களின் செய்யுட்களைத் தழுவி இனிய செந்தமிழ் நடையில் எழுதப்பட்டுள்ளது. ரூ. 1—4—0

**உதயணன்.**—இது சிறு பஞ்சகாவியங்களிலொன்ருய்ச் செய்யுள் ரூபமாக இருந்த உதயணகுமாரகாவியத்தைத்தழுவி எழுதப்பட்டுள்ளது. 0—8—0

**ஸ்ரீபாலன்.**—இஃது ஸ்ரீபுராணத்தினின்றும் எடுத்தெழுதப்பட்ட ஓர் சிறந்த கதை. இதை வாசித்தால் பல அரிய நீதிகளையெல்லாம் நன்கறியலாம். 0—10—0

**மேருமந்தரபுராணம் உரையுடன்.**—இந்நூல் இதுவரையில் அச்சில் வாராதது. ஜைனமத தத்தவங்களைச் சகலரும் அறிந்துகொள்வதற்கு இதுவே இன்றியமையாத நூலென்பது உலகறிந்தவிஷயம்.

| | | |
|---|---|---|
| ஷை | முதற் சருக்கம். | 0—6—0 |
| | இரண்டாவது சருக்கம். | 0—5—0 |
| | மூன்ருவது சருக்கம். | 0—8—0 |

**ஜிநேந்திரஞானத் திருப்புகழ்.**—ஸ்ரீ அருகபரமனைத் துதிக்கும் பாட்டுகள் நூறு கொண்டது. இதற்கு இராக தாளங்கள் அமைக்கப்பட்டிருக்கிறது. 0—8—0

**சூளாமணிகாவியம்.**—இக்காவியம் சொற்பொலிவு பொருள்நயம் நடையழகு கற்பனையலங்காரம் முதலியவற்ருல் சிறந்துவிளங்கும் 2131 செய்யுட்களைக்கொண்டது. 2—8—0

**சீவகசிந்தாமணி.**—நச்சினர்க்கினியருரை; பலவகை ஆராய்ச்சிக்குறிப்புக்களுடன். (இரண்டாம் பதிப்பு) 7—8—0

**சிலப்பதிகாரம்.**—அரும்பதவுரையும், அடியார்க்கு நல்லாருரை முதலியனவும். (இரண்டாம் பதிப்பு) 8—12—0

**இலக்கணவிளக்கம் மூலமும் உரையும்.**—திருவாரூர் வைத்தியநாத தேசிகர் இயற்றியது. ஸ்ரீமத். சி. வை. தாமோதரம்பிள்ளை அவர்களால் பதிப்பிக்கப்பெற்றது. 5—0—0

**பத்துப்பாட்டு** மூலமும் நச்சினர்க்கினியருரை முதலியனவும்; பலவகை ஆராய்ச்சிக் குறிப்புக்களுடன். (இரண்டாம் பதிப்பு.)

சரஸ்வதிவிலாஸ புஸ்தகசாலை,

21, பாரிஷ்-வேங்கடாஜலஅய்யர் தெரு.

சென்னை. ஜி. டி.